Bibliographic Record Target

*பஞ்சாமிர்தம் : ஒரு மாதாந்தரப் பத்திரிகை. -- மாலை 1, காசு 1 ([Apr./May 1924]
சித்திரை 1924)-மாலை 2, காசு 8 ([Nov./Dec. 1925] கார்த்திகை 1925) --
சென்னை : அ. மாதவையர், 1924-1925.
20 v., [2] folded sheets : ill. ; 21-24 cm.
Monthly.
In Tamil.
Editor: அ. மாதவையர்
Record No. 524*

*Pañcāmirtam : oru mātāntarap pattirikai. -- Mālai 1, kācu 1 ([Apr./May 1924]
Cittirai 1924)-Mālai 2, kācu 8 ([Nov./Dec. 1925] Kārttikai 1925) --
Cennai : A. Mātavaiyar, 1924-1925.
20 v., [2] folded sheets : ill. ; 21-24 cm.
Monthly.
In Tamil.
Editor: A. Mātavaiyar
Record No. 524*

# List of issues filmed

## பஞ்சாமிர்தம்

*மாலை 1, காசு 1*

*(சித்திரை 1924 [Apr. / May 1924])*

*மாலை 1, காசு 2*

*(வைகாசி 1924 [May / June 1924])*

*மாலை 1, காசு 3*

*(ஆனி 1924 [June / July 1924])*

*மாலை 1, காசு 4*

*(ஆடி 1924 [July / Aug. 1924])*

*மாலை 1, காசு 5*

*(ஆவணி 1924 [Aug. / Sept. 1924])*

*மாலை 1, காசு 6*

*(புரட்டாசி 1924 [Sept. / Oct. 1924])*

*மாலை 1, காசு 7*

*(ஐப்பசி 1924 [Oct. / Nov. 1924])*

*மாலை 1, காசு 8*

*(கார்த்திகை 1924 [Nov. / Dec. 1924])*

*மாலை 1, காசு 9*

*(மார்கழி 1924 [Dec. 1924])*

*Continued ...*

*மாலை 1, காசு 10*

*(தை 1925 [Jan. / Feb. 1925])*

*மாலை 1, காசு 11*

*(மாசி 1925 [Feb. / Mar. 1925])*

*மாலை 1, காசு 12*

*(பங்குனி 1925 [Mar. / Apr. 1925])*

*மாலை 2, காசு 1*

*(சித்திரை 1925 [Apr. / May 1925])*

*மாலை 2, காசு 2*

*(வைகாசி 1925 [May / June 1925])*

*மாலை 2, காசு 3*

*(ஆனி 1925 [June / July 1925])*

*மாலை 2, காசு 4*

*(ஆடி 1925 [July / Aug. 1925])*

*மாலை 2, காசு 5*

*(ஆவணி 1925 [Aug. / Sept. 1925])*

*மாலை 2, காசு 6*

*(புரட்டாசி 1925 [Sept. / Oct. 1925])*

*மாலை 2, காசு 7*

*(ஐப்பசி 1925 [Oct. / Nov. 1925])*

*மாலை 2, காசு 8*

*(கார்த்திகை 1925 [Nov. / Dec. 1925])*

# பஞ்சாமிர்தம்

## மாலை 1, காசு 1

## சித்திரை 1924

## [April / May 1924]

Record no. 524

*Pañcāmirtam*

*Mālai 1, kācu 1*

*Cittirai 1924*

*[April / May 1924]*

Record no. 524

## விஷய அட்டவணை

1924—25

### க. அரசியல் விஷயம்:—



### உ. இலக்கிய விஷயம்

I. இலக்கிய ஆராய்ச்சி:—



II. கதைகள்:—





IV. கவிகள்:—

Printed by Sri Rama Press, 15, Broadway, Madras

## "பஞ்சாமிர்தம்" பத்திரிகையைப் பற்றிய சில அபிப்பிராயங்கள்–நக்ஷத்திரமாலே.

(1) *Mr. T. V. Seshagiri Iyer, Ex-Judge. Madras High Court*—"Yours is just the kind of Magazine that is required....I am satisfied..."

(2) செந்தமிழ்—"இக்கால நிலைமைக்கேற்றபடி தமிழ் மக்கள் அறிந்துகொள்ள வேண்டிய சிறந்த பல விடயங்கள் .. இனிய தமிழ் நடையில் எழுதப்பட்டிருக்கின்றன..."

(3) *Sjt. C. Rajagopalachariar, Salem*—"The journal is very good."

(4) குமரன்—"பல அரிய வியாசங்கள் பொலிகின்றன."

(5) *The Hindu*—"* * * The style is throughout simple and readable. We have no hesitation in saying that Mr. Madhaviah has achieved a very high standard of excellence. The Magazine deserves to be in every Tamil Home."

(6) தாருல் இஸ்லாம்—"இதுவரையில் இல்லாத விதமாய் இப்பத்திரிகை வெளிவந்திருப்பது பாராட்டற் பாலதே."

(7) *Rev. H. A. Popley*—"...It is a feast of good things...a vital contribution to the progress of the Tamil people."

(8) தெய்வபக்தன்—"ஆங்கிலத்தில் வெளிவரும் "மாடர்ன் ரிவியூ" போலத் தமிழ்ப் பேசுவார் ஒவ்வொருவராலும் பெரிதும் போற்றிப் படிக்கத்தக்கது..."

(9) *Mr, K. G. Seshier, ex-Judge, Travancore*—"...Has justified the naturally high expectations of those who know you...attractive, readable and informing."

(10) தமிழ்நாடு "பல அரிய விஷயங்கள் காணப்படுகின்றன....பல படங்களும் காணப்படுகின்றன."

(11) *Mr. S. Satyamurti*, B.A., B.L., M.L.C.:—"I like the Journal very much..."

(12) *The Educational Review*:—"...The style of language is simple, flowing and free, not acidemically turgid, nor descending to the colloquial.

(13) தாய்நாடு—"பத்திரிகையின் ஒவ்வொரு பக்கமும் பல அரிய விஷயங்களைத் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கின்றது."

(14) *The Daily Express*—13-5-1924—"...Unlike other Tamil Magazines in this country Mr. Madhaviah seems to be intent upon making his Journal a really well-got up, neatly printed, interesting and readable one."





(15) விவேகபாநு—தர்பான்—"பெயருக்கேற்ப அழகும் இனிமையும் பொருந்தி விளங்குகிறது"...

(16) பண்டிதை அசலாம்பிகை யம்மாள்—"பழுதி லெய்தாது கிட்டிய இப் பஞ்சாமிர்தத்தினை எவரே விரும்பார்?"

(17) *The Indian Bookman*—"...The articles are on various subjects—political, social, economic, literary, scientific and religious."

(18) நவசக்தி—"எவர்க்கும் பயன்படும் குறிக்கொண்டு நிற்பது கவனிக்கத்தக்கது...மனத்தைக் கவரத்தக்க கட்டுரைகள் பல மிளிர்கின்றன."

(19) *The Indian Social Reformer*:—"...full of useful and interesting information."

(20) சுதேசமித்திரன்—"என்னென்ன நயங்கள் காணலாமென்று எதிர்பார்த்தோமோ அந்த நயங்கள் எல்லாம் அமைந்திருப்பதுபற்றி நாம் மிகவும் மகிழ்வெய்துகிறோம்."

(21) இந்து சாதனம்—யாழ்ப்பாணம்—"* * * இப் பத்திரிகை தமிழுலகத்துக்கு மிகவும் இன்றியமையாத தாகும்."

(22) லோகோபகாரி—சென்னை—"...இப்பத்திரிகை உலகத்தில் தோன்றினமை தமிழ்மக்களின் பாக்கியமென்று சொல்ல வேண்டும்."

(23) சன்மார்க்க போதினி - யாழ்ப்பாணம்—"இது சிறந்த சித்திரப்படங்களுடன் நல்விஷயங்களை யடக்கி வெளிவருகிறது"

(24) *Rev. F. Kingsbury*—"...I wish that before long *Panchamritam* will be tasted by the young and the old, in many if not in all Tamil homes..."

(25) கம்பநாடர்—"இதில் பலதுறைப் போக்கான விஷயங்களும், நவநாகரிகச் செய்திகளும், விகடத்துணுக்குகளும் வெளியாகின்றன. தமிழராவார் இதனை ஆதரித்தல் அவசியமாகும்."

(26) *Sir. P. Ramanathan of Ceylon*—"It promises to be useful."

(27) நாடார்குல மித்திரன்—"இப்பத்திரிகையின் மேன்மையை விளம்புதல் முடியுமோ! தமிழ் நாட்டு மகா ஜனங்கள் யாவரும் இதை வாசித் தின்புறுமாறு வேண்டுகின்றனம்."



---

குறிப்பு.—"பஞ்சாமிர்தம்" முதல் மாலே

கில்டு பைண்டான காப்பிகள் கிடைக்கும்.

விலே ரூ. 5—8—0.

[1076 பக்கங்கள்—130 படங்கள்]

## "பஞ்சாமிர்தம்" வருஷச் சந்தாதார்க்கு மட்டும் புஸ்தகங்களின் குறைந்த விலை விவரம்.

| | புஸ்தகத்தின் பெயர் | சாதாரண விலை | | | பஞ்சாமிர்தம் சந்தாதாரர்களுக்குமட்டும் குறைந்த விலை | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | ரூ. | அ. | பை | ரூ. | அ. | பை |
| | தமிழ்ப் புஸ்தகங்கள்:— | | | | | | |
| 1-3 | குசிகர் குட்டிக் கதைகள்-3-பாகங்கள் ஒவ்வொன்றும் 0-10-0. ... | 1 | 14 | 0 | 1 | 0 | 0 |
| 4 | முத்து மீனாக்ஷி-2-ம் பதிப்பு. ... | 0 | 8 | 0 | 0 | 5 | 0 |
| 5 | புதுமாதிரிக் கலியாணப் பாட்டு-2-ம் பதிப்பு. ... ... ... | 0 | 2 | 0 | 0 | 1 | 0 |
| 6 | பத்மாவதி சரித்திரம் 1-2-பாகங்கள் 5-ம் பதிப்பு சித்திரப் படங்களுடன். ... ... ... | 2 | 0 | 0 | 1 | 12 | 0 |
| 7 | விஜயமார்த்தாண்டம்-2-ம் பதிப்பு... | 1 | 4 | 0 | 1 | 0 | 0 |
| 8 | உதயலன்-ஷேக்ஸ்பியர் நாடகம். ... | 0 | 12 | 0 | 0 | 8 | 0 |
| 9 | குறள் நானூறு. ... ... | 0 | 4 | 0 | 0 | 3 | 0 |
| 10 | பாரிஸ்டர் பஞ்சநதம். ... ... | 0 | 6 | 0 | 0 | 3 | 0 |
| | மொத்தம் 10 புஸ்தகங்களுக்கும். | 7 | 2 | 0 | 5 | 0 | 0 |
| | இங்க்லீஷ் புஸ்தகங்கள்:— | | | | | | |
| 11 | Thillai Govindan—Fisher Unwin's English Edn. Published price 2/6 ... ... ... | 1 | 0 | 0 | 0 | 10 | 0 |
| 12 | The Story of the Ramayana Revised 2nd Edn. ... ... | 1 | 0 | 0 | 0 | 12 | 0 |
| 13 | Lieut. Panju: A Modern Indian. | 1 | 0 | 0 | 0 | 8 | 0 |
| | Kusika's Short Stories—Revised Edition ... ... ... | | | | | | |
| 14 | Part I—15 Stories 12 As. | 0 | 12 | 0 | 0 | 8 | 0 |
| 15 | Part II—12 Stories 8 As. ... | 0 | 8 | 0 | 0 | 6 | 0 |
| 16 | The Ballad of the Penniless Bride ... ... ... | 0 | 4 | 0 | 0 | 2 | 0 |
| 17 | Manimekalai: Tamil Classics for English Readers ... ... | 1 | 0 | 0 | 0 | 14 | 0 |
| 18 | Clarinda: A Historial Novel of S.India. A few dozen copies only | 1 | 8 | 0 | 0 | 14 | 0 |
| | Total for 8 English Books. | 7 | 0 | 0 | 4 | 10 | 0 |
| | மொத்தம் 18 புஸ்தகங்களின்விலை | 14 | 2 | 0 | 9 | 10 | 0 |

இலாபம் - ரூ. 4-8-0. குறிப்பு - தபால் கூலி வேறு.

# பஞ்சாமிர்தம்

ஒரு மாதாந்தரப் பத்திரிகை



நான் ஓரு மானுடன்: நான் மதியாதன மானுட வாழ்வில் இல.

மாலே-I சித்திரை—1924 காசு-1

## முன்னுரை



மியிலே மனிதன் தோன்றிய பிறகு அவனுக இயற்றின புதுமைகளில், தன் கருத்தைப் பிறருக்கு வெளியிடும்படி பாஷையை உண்டாக்கிக் கொண்டது ஒன்று. அருகில் இருப்பவருக்கு மட்டும் வாய்மொழியாய்ச் சொல்லுவதன்றி, நெடுந்தொலேயில் உள்ளவருக்கும் தன் கருத்தைத் தெரிவிக்கும்படி, பாஷைக்கு வடிவு கொடுத்து எழுத்துக்களை அமைத்துக்கொண்டது ஒன்று. அவ்வெழுத்துக்களையும் தன் கை நோவ எழுதி எழுதி இடர்ப்படாதபடி, சிறு பொழுதில் பல்லாயிரம் பிரதிகளைச் செய்து குவிக்கும் அச்சு யந்திரத்தை நிருமித்துக்கொண்டது ஒன்று. இம்மூன்றுமே மற்றெல்லாவித அர்ப்புதங்களினும் சிறந்து, நமது நாகரிக வளர்ச்சிக்குப் பேருதவி ஆயின என்று சொல்லலாம். தற்காலத்திலே இவ்வாறு சிலர் கருத்துக்களைப் பலர்க்குள் பரவச்செய்து நாகரிகத்தைப் பெருக்கும் அச்சு யந்திரத்தின் விளைவுகள், புஸ்தகங்களும் பத்திரிகைகளுமாம். இவற்றுள், நாள்தோறுமேனும் அடிக்கடியேனும் வெளிவரும் பத்திரிகைகள், தினசரி நடபடிக்கைகளையும், அவற்றைப்பற்றிய குறிப்புக்களையும் அவசரத்தில் கூறிக் கழிவன. மாதந்தோறுமோ இன்னும் தாமதித்தோ வெளிவரும் பத்திரிகைகள்,

சாதாரண சம்பவங்களைக் கூறுது விட்டு, மற்றவற்றை ஆர அமர ஆலோசனை செய்து முடிவான அபிப்பிராயங்களையும், அபிப்பிராய பேதங்களின் முகாந்தரங்களையும், அறிவாளிகள் கவனித்தறிந்த வேறு பல விஷயங்களையும், தினசரிப் பத்திரிகைகளைப் படிப்பவர்கள் அவற்றின் உட்கிடையை நன்கு அறிதற்கு வேண்டிய அம்சங்களையும் கூறும். புஸ்தகங்களோ எனில், இன்னும் ஆழ்ந்த ஆராய்ச்சியால் ஏற்பட்ட சித்தாந்தங்களையும், பெருமதிப்புக்கும் நீடித்த புகழுக்கும் உரிய பிறவற்றையும், நிலை பெறும் நூல்களாகக் கூறும்.

தமிழிலே மாதப் பத்திரிகைகள் பல வெளிவருகின்றன; எனினும், இவை பெரும்பாலும் ஒரு சில விஷயங்களையே கையாளுகின்றன. நமது நாகரிக வாழ்க்கைக்குரிய பல துறைகளையும் தழுவி நடைபெறும் மாதப் பத்திரிகை, நான் அறிந்தவரை, ஒன்றேனும் தமிழில் இல்லை. இங்கிலீஷில் பலவும், வங்காளி, குஜராத்தி, மராத்தி, தெலுங்கு முதலிய மொழிகளில் சிலவும், இத்தகைய பத்திரிகைகள் உள. மற்று எவ்விதத்தினும் இந்தப் பாஷைகளுக்குத் தாழாததும், இவை யாவற்றினும் மேலான பழம்புகழ் படைத்ததுமான நமது அருமைத் தாய் மொழிக்குள்ள இக்குறையை நிரப்புவது, என்னினும் மிக்க அறிவும் படிப்பும் உள்ளவர் பணியாயினும், வேறு எவரும் முன்வராமையினால், நாட்டுப் பற்றும் பாஷாபிமானமும் உள்ள தமிழ் மக்களின் உதவியைக் கொண்டு உழைத்துப் பார்க்கத் துணிந்து, நான் முன்வரலானேன்.

உண்மை, அன்பு, அறிவு, ஒற்றுமை உழைப்பு என்னும் ஐந்தையும் கலந்ததாகும் இப் பஞ்சாமிர்தம், தமிழ் நாட்டிலும், தமிழ் மக்கள் குடியேறியுள்ள பிறநாடுகளிலும், ஆங்கிலம் அறியாத ஆண்மக்கள் பலர்க்கும், மாதர் சிறுவர் சிறுமிகளுக்கும், ஆங்கிலம் அறிந்தும் தமிழ்த் தாயைக்கைவிடாத சிலர்க்கும், நெடுநாளாய்த் தாம் புறக்கணித்துவந்த தாய் மொழியை மீண்டும் பயில ஆசை கொண்டுள்ளார்க்கும், தினசரிப் பத்திரிகைகளை வாங்கிப் படிக்கப் பணம் இல்லாதவர்க்கும் உரித்தாகும். நாடெங்



கும் ஆங்கு ஆங்கு முளைத்தெழும் தேசிய உணர்ச்சிப் பயிருக்கு இப்பத்திரிகை மூலமாய் ஊக்க உரம் இட்டு, அறிவு நீர் பாய்ச்சி, அவ்வுணர்ச்சியைத் தழைத்தோங்கச் செய்ய முயலுவது என் முக்கிய நோக்கம். அரிய பெரிய இவ்வேலையில் எல்லோரும் அவரவர்க்கு இயன்றவரை கையுதவ வேண்டுகிறேன்.

அ. மாதவையர்

## ஓர் ஆசிமொழி

**ஸ்ரீமதி மங்களம்மாள்–லேடி சதாசிவ ஐயர்–சென்னை**



ன்று உதித்த குழந்தையின் பெயர், பஞ்சாமிர்தம்என்றுகேட்க ஸந்தோஷப் படுகிறேன். இந்தஞானக்குழந்தைக்கு வேண்டிய ஆகாரம், இந்தப் பஞ்சாமிர்தமே யாகும். பழைய நாள் முறைப்படி, குழந்தை பிறந்ததும் தேன் கொடுப்பது முக்கியம். அப்படியே புத்தி என்னும் இந்தச் சிசுவுக்கு, உண்மைத் தேன் முதல் ஆகார மாகும். அடுத்தாற் போல், பால் எவ்வளவு முக்கியமோ, அந்த இடத்திலே அன்பு அமைக்கப் பட்டிருக்கிறது. சர்க்கரை போல், உணர்ச்சியைப் பெருக்குகிற இடத்தில், அறிவை அமைத்திருக்கிறது. வேற்று ரசம் கலந்தால் தான் முக்கியரசம் எடுத்துக்காட்டும் என்பது தத்துவம். உப்பு, கைப்பு, தித்திப்புப்பதார்த்தங்களில் முறையே புளிப்பு, தித்திப்பு, உப்பு, சேர்க்கப் படுவது வழக்கம். அப்படியே தயிர் கலக்கப் படுவது, அந்த இடத்தில் ஒற்றுமைதான் முன்னேற்றத்தின் அடிப்படை என்பதைக் குறிப்பிட்டுச் சேர்க்கப் பட்டிருக்கிறது. பாலிலிருந்து, நெய்யை எடுக்க உழைப்பு அதிகம் வேண்டும் என்கிற இடத்தில், உழைப்பைக் கடைப் பிடித் திருக்கிறது. இவ்வளவு குறிப்பான பெயரை வாய்ந்திருக்கிற இந்தக் குழைந்தையானது, வளர்பிறைச் சந்திரன் போல் பெருகி, பூர்ணயுசைப் பெற வேண்டுமென்று ஈசனைப் பிரார்த்திக்கிறேன்.

இந்தக் குழந்தைக்குத் தகுந்த ஆகாரம் கொடுக்க நான் திறமை உடையவளல்ல. ஆனாலும், குழந்தையையும்,

தெய்வத்தையும் பார்க்கிறவர்கள், சக்தி யானு சாரம் ஏதாவது கொடுக்க வேண்டும் என்கிற கட்டளைப்படி, சகோதரர் மாதவய்யா அவர்கள் வாக்கைப் புறக்கணிக்க மாட்டாதவளாய், இரண்டொரு வரிகள் எழுதத் துணிந்தேன். எனக்குக் கொஞ்சம் பழக்கமுள்ள திருக்குறளில், "சொல்வன்மை" என்னும் அதிகாரத்தை முக்கியமாக எண்ணுகிறேன். அதன் முதற்பாட்டு,

> "நாநலம் என்னும் நலனுடைமை அந்நலம்
> யாநலத் துள்ளதூஉம் அன்று"

என்பது. இது அமைச்சர்களை முன்னிட்டு யாவர்க்கும் சொல்லப் பட்டதாகும். பிரித்தல், பொருத்தல் முதலிய வைகள், அரசாங்கத்துக்கு மாத்திரமே யல்ல; உலக யாத்திரையி லிருக்கிற ஒவ்வொருவரும் கைப்பிடிக்க வேண்டிய வழியாகும். இந்தக் குறிப்பைக் கொண்டே மூதாட்டியாரும், "சொற்சோர்வுபடேல்" என்று உரைத்திருக்கிறார். பிறகு, ஆக்கத்துக்கும் செல்வத்துக்கும் சொற்சோர்வு காரணமென்பதையும்;

'கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்வேட்கும் மொழி' வேண்டும் என்பதையும்; கேட்போர் திறம் அறிந்து சொல்லாவிட்டால், அறம் பொருளுக்கு இடமில்லாமல் போகும் என்பதையும்; கேட்போர் திருப்தி மாத்திரம் போதாது என்பதையும்; தனக்குத் தெரிந்த மட்டில் நிற்காமல், பிறர் சொற்பயன், சிறிதளவாலும் கருத வேண்டும் என்பதையும்; சொல்வன்மை உள்ளவனை வெல்லுவது முடியாது என்பதையும்; கோர்வையாகச் சொல்லும் சொற்களை, மனிதர் விரைந்து கேட்பார்கள் என்பதையும்; பொருளில்லாது அடுக்கும் சொற்கள், அறிவீனத்தைக் குறிக்கும் என்பதையும்; பிறர்க்கு விளங்கச் சொல்ல மாட்டாதவர் வாசனையில்லாத மலரை ஒத்தவர் என்பதையும் நாயனர் குறிப்பிட்டிருக்கிறார்.

இந்த அதிகாரம் எனக்கு முதன்மையாகத் தோன்றுகிறபடியால், இந்த அதிகார விஷயத்தில் தேர்ச்சி யுள்ளனம் பத்திராதிபர் முயற்சி பெருகுமென்று நம்புகிறேன்.

---

# பாரதியார் தமிழ்ப் புலமை

ஸ்ரீ. S. சோமசுந்தரபாரதி,
M. A., B. L., மதுரை




மீபத்தில் காலஞ் சென்ற சி. சுப்பிரமணிய பாரதியார் தன்னிகரில்லாத தமிழ்ப் புலவர். நமக்கு நெருங்கிய காலத்தவராகவே, அவர் கவிநலத்தின் உயர்வை உள்ளபடி அளந் தறிவது அருமை யாகும். வெறுப்பவரும் நயப்பவரும் நடு நிலையின்றி இவர் இயல்புகளைக் கடையிறந்து காண்பாராவர். நம்கால நிகழ்ச்சிகளில் ஈடு பட்டு நவீன ஆதர்சத்தால் ஆகர்ஷிக்கப்பட்டு, நம்மிடையே பாடும் நம் காலப் புலவர் ஒருவரின் கவிகளை, மிதமிஞ்சிப் புகழ்வாரும் வெறுத்து மிகப் பழிப்பவரும் பலராவர்; ஆனல் இத்தகைய புலவரின் கவிகளை, கவிநலம் அறிவதன்றி வேறு நோக்கம் கொள்ளாது, தம் உணர்வைக் கவர விடாது, படிப்பதும், படித்து அவற்றின் இயல்பை அளந்தறிவதும் மிகச்சிலர்க்கே யாவதாகும். நடுமை நல்லறிவாளர் பாரதியார் கவித்திறம் அறிந்து கூறும் நய உரைகள் காணும்வரை, மற்றவர் இப்புலவர் கவிதை நலம் காண முயல்வது, தவறென்பது தகாதன்றோ? ஆனவரை இத் தமிழ்ப் புலவர் கவி நலத்தை ஆராய்வோம்.

முதலில் தற்காலத் தமிழ்ப் புலவர் சங்கேதங்களுக்குப் பாரதியார் பெரும்பாலும் இணங்காதவர். நாக பந்தங்களும், ஏகத்தாள் இதழ் அகல் யமக அந்தாதிகளும், புலமைத் தலைக்கோலாக் கருதும் பாவலிரிடையில், சித்திரகவி சத்துருவான பாரதியார் பாக்கள், மதிக்கப் படுவது அருமையேயாகும். மனேபாவ அருமையோடு பொருளும் வறண்ட தற்காலத்திலே, புலமை வனம், அழகொடு மணம் செயு மலர்க ளேனும், கொழுவிய தண் சுவைக் கனிக ளேனும் தரமாட்டாது; அடர்ந்திருண்டு காழ்த்து மலிந்த இலைச் செடிகளாலும் புதர்களாலுமே நிறைந்து தோன்றுவது இயல்பாகும். தற்காலம் தழைகளே தழைவதாகவே, மணமற்ற தழை மாலைகளே பெரும்பாலும் தொடுக்கப் படுகின்றன. அழகு மணம் முதலிய இயற்கை நலம் இல்லாதாகவே, தழைகளை வினைத்திற மலியப் பலவாறு தொடுத்து, அடுக்காலும் தொடையாலும் பல்வேறு பட்ட இலைமாலைகளையே பலரு முடைகின்றனர். இவ்வனத்திடையே தளரா ஊக்கம் உடையான்

ஒரு புலவன், வெறுஞ் செடிகளைந்து, நிலம் திருத்தி, உணர்வு நீர் வார்த்து, உரன் கதிர் ஊட்டி வளர்த்த நல்ல தமிழ்ப் பூந்தோட்டத்தில், நறுமலரும் சுவைக் கனியும் காணப் பெற்ருல், அஃது, அந்த வனத்தின் இயல்புக்குப் பொருத்த மற்ற அபூத விளைவாகவே தோன்றும். பாரதியார் பாக்கள் இப்படிப்பட்ட இலவனத்திடை எழுந்த கனிமரத் தோப்பாம்.



காலஞ் சென்ற கவி சி. சுப்பிரமணிய பாரதியார்.

இவர் பாக்கள், கருத்துக்களை வருத்தமின்றி விளக்கும் பண்டைப் பாவலர் பளிங்கு நடை பயின்று, இளகி ஒளிரும் வெண்பொன் ஒழுக்கும், இனிய ஓசையும், திட்பமும் சுவையும் உடையன. இப்புலவரது நூல்களைப் படிப்ப வருக்கு, நிகண்டு அகராதிகள் வேண்டா; கள்ளமற்ற உள்ளமும், ஊன்றிய கவனமும், தமிழில் ஆர்வமும் உடையாருக்கு, இப்புலவர் இதயம் வெள்ளிடை மலையாம். எளிய இனிய இவர் கவிநடை, நீரொழுக்கு உடையதேனும், வயிரத்தின் திண்மையு மொழியும் பெற்று நிற்கும்.

(1) '.......................கண்ணிரண்டும்
ஆளை விழுங்கும் அதிசயத்தை கூறுவனோ?
மீள விழியில் மிதந்த கவிதை யெலாம்
சொல்லில் அகப்படுமோ? .................."

(2) "நீலத் திரைக்கடல் ஓரத்திலே—நின்று
நித்தம் தவஞ்செய் குமரியெல்லை—வட
மாலவன் குன்றம், இவற்றிடையே—புகழ்
மண்டிக் கிடக்கும் தமிழ் நாடு."

(3) (எங்கள் தாய்) "செப்பு மொழி பதினெட்டுடையாள்—
எனிற், சிந்தனை ஒன்றுடையாள்."

(4) "பூதல முற்றிடும் வரையும்—அற்ப
போர் விறல் யாவும் மறப்புறும் வரையும்
மாதர்கள் கற்புள்ள வரையும்—பாரில்
மறைவருங் கீர்த்திகொள் ரஜபுத்ரவீரர்."

(5) "நாமிருக்கும் நாடு நம தென்பதறிந்தோம்,—இது
நமக்கே உரியதாம் என்பதறிந்தோம்—இந்தப்
பூமியில் எவர்க்குமினி அடிமை செய்யோம்—பரி
பூரணனுக் கே அடிமை செய்து வாழ்வோம்."

(6) "...................... — தெற்கு
மாகடலுக்கே நடுவினிலே அங்கோர்
கண்ணற்ற தீவினிலே—தனிக்
காட்டினிற் பெண்கள் புழுங்குகின்றார் அந்தக்" (கரும்புத்
தோட்டத்திலே)

(7) "மதியுண்டு செல்வங்கள் சேர்க்கும்—தெய்வ
வலியுண்டு தீமையைப் பேர்க்கும்
விதியுண்டு தொழிலுக்கு விளைவுண்டு, குறைவில்லை,
விசனப் பொய்க்கடலுக்குக் குமரன்கைக் கணையுண்டு (ஜய
முண்டு பயமில்லை மனமே)"

(8) "மாலைப் பொழுதி லொரு மேடை மிசையே
வானையும் கடலையும் நோக்கி இருந்தேன்.
மூலைக் கடலினை அவ் வான வளையம்
முத்தமிட்டே தழுவி முகிழ்த்தல் கண்டேன்.

நீல நெருக் கிடையில் நெஞ்சு செலுத்தி
நேரங் கழிவதிலும் நினைப்பின்றியே
சாலப் பலபல நற் பகற் கனவில்
தன்னை மறந்த லயந் தன்னிலிருந்தேன்."

இணைய உருகு பொன் ஒழுக்குடைய ஒப்பற்ற இனிய அடிகளைப் படிக்குந் தொறும் நாவும், கேட்குந்தொறும் செவியும் இனிக்கும்.

அலங்காரங்களுக் கெல்லாம் தாயான உவமையைக் கையாளுவதில் இப்புலவர் பண்டைப் பாவலர் பலர்க்கும் இளையாதவர். இக்காலத்தில் இணையற்றவர். வருந்தித் தேடிப் பொருந்தச் செய்யும் புலவர் பெருமுயற்சியை நன்றி மறவாது சுமந்து காட்டும் பல புலவர் அணிகளைப் போலன்றி, பாரதியாரின் உவமைகள், இயற்கையினின்று இவர் வாக்கைத் தேடி வந்தடையும். கருத்துக்குப் பொருத்தம் உடைமையோடு, கேட்போர் மனத்தில் பதிந்து மறையாது உறையும் செவ்வி உடையவாம் இவர் உவமை அனைத்தும். இயற்கையினின்று எளிதிலெடுத்து, தன் கவிதை அமுதருத்தி, இவராளும் உவமைகள், இப்புலவர் கற்பனைத் திறனையும், ஒப்புணர் தேர்ச்சியையும், கவிவினை கைவினை முதிர்ச்சியையும், அநாயாச ஆட்சியையும் இனிது காட்டும். பழம் பாட்டுக்களைத் துருவி, பண்டை உவமைகளை உருவி, தம் புலமை நிறுவக் கருவியாக்கும் இழி செயலை அறவே வெறுத்தவர் இப்புலவர்.

"விண்ணகத்தே இரவிதனை வைத்தாலும், அதன் கதிர்கள் விரைந்து வந்து
கண்ணகத்தே ஒளிதருதல் காண்கிலமோ? நின்னை அவர் கனன்று, இந்நாட்டு
மண்ணகத்தே வாழாது புறஞ்செய்தும், யாங்களெலா மறக்கொணுது, எம்
எண்ணகத்தே, லாஜபதி, இடையின்றி நீ வளர்தற் கென் செய்வாரே?"

எனவும்,

"தேனை மறந்திருக்கும் வண்டும்,—ஒளிச்
சிறப்பை மறந்து விட்ட பூவும்,
வானை மறந்திருக்கும் பயிரும்—இந்த
வையம் முழுது மில்லை தோழி"
"கண்ணன் முக மறந்து போனல்—இந்தக்
கண்கள் இருந்து பயன் உண்டோ?"

என்றும்,



"பாயும் ஒளி நீ எனக்கு—பார்க்கும் விழி நான் உனக்கு,
தோயு மது நீ எனக்கு—தும்பியடி நான் உனக்கு"
"பானமடி நீ எனக்கு—பாண்டமடி நான் உனக்கு"
"பண்ணு சுதி நீ எனக்கு—பாட்டினிமை நான் உனக்கு"
"வீசு கமழ் நீ எனக்கு—விரியு மலர் நான் உனக்கு
பேசு பொருள் நீ எனக்கு—பேணு மொழி நான் உனக்கு"

என்றும்,

"மண்ணில் இன்பங்களை விரும்பி சுதந்தரத்தின்
மாண்பினை இழப்பாரோ?
கண்ணிரண்டும் விற்றுச் சித்திரம் வாங்கினல்
கை கொட்டிச் சிரியாரோ?"

எனவும், வருவன பல உவமைகளையுங் காண்க. உவமான உவமேய இயைபுகளும், அவைகளின் அழகும், கவிகளில் இவற்றின் அமைப்பும் விசதமாக எடுத்து விரிப்பதானல், இவற்றிற்கே பல வியாசங்கள் வேண்டும். கேவலம் பண்புகளையும் மனோபாவ எண்ணங்களையுமே உருவகப் படுத்தி, அவற்றின் உதவி கொண்டு, தம் கோள் நிறுவுதலில் இவர் கைவந்த சமர்த்தர். கண்ணனைக் காதலி பாவமாக்கித் தன் காதல் பாடும் பக்தன் வாயில்,

"வீரமடி நீ எனக்கு—வெற்றியடி நான் உனக்கு"

என்று இவர் கற்பித்த கவிதையின் நயம்கருதி வியவாதிருக்க முடியாது.

தமிழ் இலக்கண நுணுக்கங்களை ஆராய்ந்து தெளிவோர், தமிழ் கேவலம் ஒட்டு மொழி அன்று; ஆரியம் போல் அசையேற்று மாற்றங்காட்டு நிலையுடைமையோடு, ஆங்கிலம் போல் சொற்கூட்டறுத்துப் பிரிவு நிலையையும் அடைந்துளது, என்பதை அறிவார். இஃதெப்படி யாயினும், தமிழ்ப் பெரும் புலவர் இவ்வாறு இடர்ப்படுவதில்லை. "துயர்" "மழை" என்னும் பெயர்ச் சொற்களினின்று "துயரினன்" "மழைத்தனள்" என்று அனுயாசமாய் வினைகளாக்கித் தமிழாக்கங் கண்ட கம்பர் அன்ன பழம் பெரும் புலவர் தமிழ்த் திறம், இறவாது நின்று நிலவுகிறது; உரனோடு ஊக்கமுடைய தமிழ் வாணரால் இன்றும் கையாளப்படுகின்றது. பாரதியார் இத்திறம் கைவந்த கவி என்பதை அவர் பாக்களிற் பரக்கக் காணலாம். இதற்கு ஈண்டு ஒரே சான்று காட்டிப் போவேன்.

"உற வென்றும் நட்பென்றுங் கதைக்கிறுன்", என்று சுயோதனன், பாஞ்சாலி சபத நூலில், தன் தந்தையை வெறுத்துக் கூறுமிடத்து இப் பிரயோகம் போலவே,

பாரதியார் பனுவல்களில் பல வேறிடத்திலும் இப் புலமை நலம் ஒளிரக் காண்போம்.

பாரதியார் பாட்டுக்களில், "நொள்ளைக் கதைகள்,"—"கண்ணாலஞ் செய்யுங் கருத்துடையேன்,"—"பிச்சைச் சிறுக்கி செய்த பேதகத்தைப் பார்த்தாயோ?"—"நட்ட நடு நிசியில்,"—"பட்டப் பகலிலே பாவிமகள் செய்தியைப் பார்,"—"கள்ளத்தைக் கொண்டொரு வார்த்தை சொன்னால் அங்கு காறி யுமிழ்ந்திடுவான்,"—"தாலிகட்டும் பெண்டாட்டி சந்ததிக ளேதுமில்லை,"—"நீசக்குயிலே, நிலையறியாய்ப் பொய்மையே,"—என்றிவ்வாறு பல விடத்தும், பாட்டுக்கும் பாத்திரங்களுக்கும் பொருத்தமாக நடப்புச் சொற்களை நயம்பட எடுத்தாளும் புலமைத் திறனுங் கவிநலமும் கனிந்து கவினும்.

இவரைக் குற்ற மற்ற மதுரகவி என்னலாம். இவர் சித்திர கவிக்கு மித்திரரில்லை. பண்டை முறைப்படி விஸ்தாரப் படுத்தி யாதொரு நூலுஞ் செய்ய இவர் விரும்பினதாய்த் தெரியவில்லை. வெளிவந்த "பாஞ்சாலி சபதம்" ஒத்த சில சிறு காவியங்களையும், அச்சேறாத "சேற்றூர் உலா" அன்ன சில ஒரு துறைக் காதற் பனுவல்களும் இவர் செய்த துண்டு. இவர் இயற்றிய ஒரு பொருள் நுதலிய பல துறைக் கோவைகளில், "கண்ணன்பாட்டும்," "சுதேச கீதங்களுமே" தலை நின்ற சிறப்புடையனவாம். கவிதொறுங் கனியும் தேனும், அடிதொறுங் கமழுங் கண்டும் திகட்டாத சுவை தருவதாம்.

பண்டு தொட்டுப் பாவலர் நால் வகைப் பாவினும் இயற்றியுள்ள பனுவல்கள் ஆயிரக் கணக்கானவை. திருத்தக்க தேவரும் கம்பரும் விருத்தப்பாவை வீறு பெறச் செய்தது முதல், பிந்திய புலவரெல்லாம் பாக்களின் பண்பையும் பயனையும் அறவே மறந்து, விருத்தப்பா இனத்திற்கே அரசுரிமை தந்துவைத்தார். விருத்தமல்லாப் பல துறைப் பாவினங் கொண்டெழுந்து, விழுமிய தனிப் பனுவலாகப் புலவர் போற்றுவது, தற்கால உலகில் கலிங்கத்துப்பரணி ஒன்றே. இந்நிலையில் தமிழகத்தெழுந்த நம் புலவர், தம் தனிப் பாசுரங்களால் தலைநின்ற தன் கவித் திறத்தை எவ்வகைப் பாவினுங் காட்ட வல்லாராயினும், தாம் தொகுத்த பனுவல்கள் பலவும் இசையொடு பாடத் தகும் பாவினப் பாட்டுக்களைக் கொண்டே செய்து அமைத்து வைத்தார். நமது கவியின் புதுக் கருத்துக்களுக்கும், நாடு மொழி மதங்களொடு குறுகாமல், மக்கள் நலத்தொடு



விரிந்த விசால நோக்கத்துக்கும், உலக முழுதும் பரந்து வந்து நமது நாட்டையும் இயக்கும் புதுக்கிளர்ச்சிக்கும் மிக்க பொருத்தம் உடையதாகவும்; தன் கவி உள்ளம் கனிந்துருகி அலைத்தெழும் உணர்வு வெள்ளத்தை வழிப் படுத்தி, தமிழ்ப் பெருமக்களை ஊக்கி, அவர்க்கு ஆக்கம் தருவதற்கு இசை இனிக்கப் பாடுவதே கடன் என்றறிந்த புலவர், அக்கருத்து மேற்கொண்டும், இவர் இப் புதுவழிப் புகுந்து, தமிழருக்குப் புதிய உணர்ச்சியும் தமிழுக்குப் புதுப் புத்தணிகளும் தேடித் தந்துளார். யதுகை மோனைகளைத் தேடிப் பொருளிழந்து திண்டாடும் பாக்களால் புண்பட்ட தமிழ் மகள், தொட்டதெல்லாம் பொன்னாக்கும் இவர் பாவன்மை வேது பெற்று, ஆறுதலு மகிழ்வும் அடைவாள். பாப்பாப் பாட்டு, முரசுக் கவிகளால் மிழன்று; பள்ளும் கிளிப் பாட்டும் பயின்று; விடுதலை, தாய் நாடு பாடி; பாஞ்சாலி சபதம் கூறி; கண்ணன் பாட்டு ஜீவன் முக்திகளில் வீறிய இவர் கவிதை நலம், பண்ணேறி விண்ணுயர்ந்து உலவுவதாகும். சமையம், ஆசாரம், சமுதாய ஒழுக்கம் ஆதியவற்றுள் சமதிருஷ்டியும், சர்வாபி அனுதாப நிறைவும் இவர் பாத்தொறும் பரவி விரவும். எனைத்தானும் தற்கால தமிழுலகில் இவரொத்தாரைக் காண்பதரிது: மிக்கார் இலராவர்.

# காந்தி வினா விடை

ஸ்ரீ. C. இராஜகோபாலாச்சாரியார், B.A., B.L., சேலம்.

(க)

வினா—காந்தி மகாத்மா போதிக்கும் முக்கிய தத்துவம் என்ன?

விடை—அன்பு.

வினா—அவர் முக்கிய கொள்கை அஹிம்சை யல்லவா?

விடை—ஆம். அஹிம்சா தர்மத்தின் தத்துவமும் அன்பும் ஒன்றே.

வினா—அதெப்படி?

விடை—மனம், வாக்கு, செய்கை இவை மூன்றும் அஹிம்சை வழியில் செல்ல வேண்டுமானால், மனசில் அன்பு வளர்தல் வேண்டும். அஹிம்சைக்கு அன்பு தான் மூலாதாரம்.

வினா—தற்போது நம்மை ஆண்டுவரும் ஆங்கிலேயர் மீது காந்தி மகாத்மாவுக்குப் பகையில்லையா?

விடை—இல்லை.

வினா—ஆங்கிலேய ஆட்சியைத் தொலைக்க மகாத்மா காந்தி முயலுகிறாரல்லவா?

விடை—நாம் சுதந்தரம் பெற வேண்டி முயலுகிறார். இத் தேசம் சுதந்தரம் அடைந்தால் தான், ஏழைகள் சுகமாயும் மானத்துடனும் வாழ முடியும். நாம் சுதந்தரம் அடைவதால் ஆங்கிலேயருக்கு எவ் விதக் குறைவு அல்லது துன்பமும் நேரிடாது.

(உ)

வினா—நாம் சுதந்தரம் பெற இன்றியமையாதது என்ன?

விடை—ஒற்றுமை.

வினா—பல ஜாதி மதபேதங்கள் இருக்க, ஒற்றுமை எப்படி உண்டாகும்?

விடை—ஜாதி மத பேதங்கள் இருந்தாலும், அன்பினால் ஒற்றுமை உண்டாகும்.

வினா—ஹிந்துக்களும் முஸ்லீம்களும் அன்புடன் வாழ முடியுமா?

விடை—அவர்களுள் பகைமைக்குக் காரணமே இல்லை. ஹிந்துக்களும், முஸ்லீம்களும், இன்னும் மற்றெல் லோரும், அன்புடன் கூடி வாழலாம். அப்படி வாழ்ந்தாலொழிய, சுதந்தரத்தை அடையவாவது நிலைநிறுத்தவாவது முடியாது.

(ங)

வினா—கதர் என்றால் என்ன?

விடை—கை ராட்டினத்தால் நூற்ற நூலைக்கொண்டு கைத் தறியில் நெய்த துணிக்கு, **கத்தர்** அல்லது காதி என்றுபெயர். இதைத் தமிழ்நாட்டில் கதர் என்று வழங்குகிறார்கள்.

வினா—இது நம்முடைய நாட்டிற்குப் புதியதா?

விடை—இல்லை. சில வருஷங்களுக்கு முன் இந்நாட்டில் உள்ள நாம் எல்லோரும் இராட்டின நூலால் நெய்த துணியைத்தான் உடுத்தி வந்தோம்—வெளிநாடுகளுக்குக் கூட அனுப்பி வந்தோம்.

வினா—கதர் என்கிற பெயர் முன்காலத்தில் வழங்கி வந்ததா?



விடை—வேறு துணியே இல்லாதிருக்கையில் கதர் என்கிற தனிப்பெயர் இருக்கக் காரணமில்லை.

வினா—கைத்தறியில் ஆகும் துணி யெல்லாம் சுதேசி யல்லவா?

விடை—அல்ல. சீமை நூலைக் கொண்டு கைத்தறியில் நெய்தால், அத்துணி கதர்த் துணி யல்ல.

வினா—கதர்த் துணி உடுத்துவதால் என்ன பயன்?

விடை—நாம் உடுத்தும் துணியும், அதற்கு வேண்டிய நூலும் நம்முடைய வீடுகளிலே உண்டானால், துணிக்காக நாட்டின் செல்வம் நாட்டைவிட்டு வெளியே போக வேண்டியதில்லை. ஏழைக் குடியானவர்களும் மற்றவர்களும் வறுமையால் பீடிக்கப் படாமல் இருப்பார்கள். நாடு முழுவதும் தொழில் ஏற்பட்டுப் பஞ்சம் நீங்கும்.

வினா—நம் நாட்டிலேயே உண்டான மில் துணிக்கு ஏன் மகாத்மா ஆக்ஷேபிக்கிறார்?

விடை—மில் நூலால் நெய்த துணியை நாம் கட்டுவதால் தேசத்தில் பசியால் வருந்தும் எல்லா ஏழைகளுக்கும் தொழிலும் உணவும் வேண்டிய அளவு உண்டாகாது. ஒரு ரூபாய் கொடுத்துக் கதர் வாங்கினோமானால் 16 அணாவும் அதை உண்டாக்கின ஏழைகளுக்கே போகும். மில் துணி, அல்லது மில் நூலால் நெய்யப் பட்ட கைத்தறித்துணி, இவைகளுக்குக் கொடுக்கும் விலையில் ஒரு சிறு பகுதிதான் ஏழைகளைச் சேரும்.

வினா—சுயராஜ்யத்திற்குக் கதர் ஏன் இன்றியமையாதது?

விடை—இந்த நாட்டிலுள்ள கோடிக்கணக்கான ஏழைகளுக்குத் தொழில் ஏற்பட்டு வறுமை நீங்கினால் தான், காந்தி மகாத்மா கோரும் சுயராஜ்யம் வந்த வண்ணமாகும். சில இந்தியருக்கு அதிகாரப் பதவிகள் கிடைத்தமட்டில், உண்மை சுயராஜ்ய மாகாது. நாமெல்லோரும் கைராட்டினக் கதர் கட்டினால் தான், கோடிக்கணக்கான ஏழைகளுக்குத் தொழில் கொடுப்போம். வறுமை நீங்கும்.

வினா—எல்லாரையும் கதர் கட்டச் செய்ய முடியுமா?

விடை—ஏழைகளிடத்தில் அன்பு உண்டானால் எல்லாரும் கதர் நிச்சயமாகக் கட்டுவார்கள்.

வினா—இறந்து போன ஒரு கைத்தொழிலை உயிர்ப்பிப்பது கடினமல்லவா?

விடை—கடினம் தான். நாம் நூற்றால் மற்றவர்களும் அதைப் பார்த்து நூற்பார்கள். அன்பினாலும் உழைப்பாலும் எந்தத் தடைகளையும் தாண்டலாம்.

வினா—கதர் உடுத்தினால் வருஷம் ஒன்றுக்கு எவ்வளவு செல்வம் தேசத்திற்கு மிகுதியாகும்?

விடை—குறைந்தது வருஷம் ஒன்றுக்கு 60 கோடி ரூபாய் மிகுதியாகும். இத்தொகை ஏழைகளின் குடும்பங்களுக்கு வருஷா வருஷம் போய்ச்சேரும்.

(ச)

வினா—தீண்டாமையை ஒழித்தல் என்றால் என்ன?

விடை—பஞ்சமர்கள் என்பவர்கள் மற்றவர்கள் அருகில் வருவதனாலும் அவர்களைத் தீண்டுவதினாலும் அசுத்தமாய் விடுவோம் என்று தவறாய் நினைப்பதை ஒழிக்கவேண்டும். அசுத்தம், வியாதி, இவைகளை வெறுக்க வேண்டுமே தவிர, மனிதர்களாய்ப் பிறந்த ஒரு வகுப்பாரை விலக்குவது குரூரமான பாவமாகும்.

வினா—மகாத்மா ஜாதி பேதமே கூடாது என்கிறாரா?

விடை—அவர் அப்படிச் சொல்லவில்லை. ஜாதிபேதங்கள் இருந்தாலும், பஞ்சமர்களுக்குக் கோயில், குளம், மடம், தெரு முதலிய இடங்களுக்குப் போக வர எவ்விதமான தடையும் இருக்கக்கூடாது என்று சொல்லுகிறார். மற்ற ஹிந்து ஜாதியார்கள் எப்படி ஒன்றாய் வாழ்கிறார்களோ, அப்படியே பஞ்சமர்களும் மற்றவர்களுடன் கலந்து, ஒடுக்கப்படாமல் வாழவேண்டும் என்கிறார்.

வினா—இது நம்முடைய மதத்திற்கு விரோதமல்லவா?

விடை—ஹிந்து மதப்படி மகா பாதகங்கள் செய்பவர் சண்டாளர் ஆவார்கள். மற்றவர்கள் எவரையும் விலக்கி வைக்க ஆதரவு கிடையாது. அப்படியிருந்தாலும், அந்த அநாகரிக வழக்கத்தை மாற்றத்தான் வேண்டும்.

வினா—இது அசாத்திய மல்லவா?

விடை—ஒருநாளு மல்ல. மனதில் அன்பை வளர்த்தோமானால், ஒரே நொடியில் இக்கொடிய வழக்கம் தொலையும்.



(ரு)

வினா—இவைதானா மகாத்மாகாந்தியின் உபதேசங்கள்?

விடை—ஆம்.

வினா—அவர் சொல்லுகிற எல்லாவற்றிற்கும் அன்புதான் வழி என்று சொல்லுகிறீர் அல்லவா?

விடை—ஆம். மகாத்மா வேண்டுவது அன்பு ஒன்றேதான்.

வினா—அன்பை எல்லோராலும் வளர்க்க முடியுமா?

விடை—முடியும்.

வினா—அது எப்படி?

விடை—மனித ஜாதிக்கே அன்பு இயல்பாகும்; அது பிறவியில் ஆத்மாவுடன் கூடி நிறைந்து நிற்கும்.

வினா—அப்படியானால் ஏன் நாம் அனைவரும் அன்புடன் வாழாமல் கஷ்டப்படுகிறோம்?

விடை—ஆசை, கோபம், இவைகளால் சுபாவமான அன்பு அடக்கப்பட்டு, மயக்கத்தில் மூழ்கி நிற்கிறோம்.

வினா—அன்பை எப்படி வளர்ப்பது?

விடை—ஆசை, கோபம், இவைகளை அடக்கியாள முயன்று, 'பகவானே! எல்லாரிடத்திலும் என் உள்ளத்தில் அன்பு நிறையச் செய்வாயாக! உலகத்தில் எல்லாருள்ளத்திலும் அன்பைப் பெருக்குவாயாக!' என்று தினமும் கடவுளை வணங்கிப் பிரார்த்தித்தோமானால், நிச்சயமாய் அன்பு எல்லார் உள்ளத்திலும் வளரும்.

# ஸாக்ரதீஸ்

## ஸ்ரீலஸ்ரீ இலக்குமணப் போற்றிகள்

"நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினு மாணப் பெரிது"—திருக்குறள்.



நிலையாவது ஒருவன் மனத்தைப் போன போக்கிலே செல்ல விடாமல், நன்மை தீமைகளைப் பகுத்தறிந்து, தீமையை நீக்கி, நன்மையைக் கடைப் பிடித்து நிற்கும் நிலைமையாகும். இந்நிலைமை பெற்றவன், இவ்வுலக இன்பங்களைத் தன்வசப் படுத்தியும், தான் அவற்றின் வசப்

படாமலும், அநுபவிப்பவ னுவான். இன்பத்துள் இன்பத்தை விரும்பாதவன் துன்பத்தினுல் துன்பம் அடைய மாட்டான். ஆகவே, எத்தனை இடர்கள் வரினும், இவனுடைய மனோ நிலையானது சலியாமல் திடப்பட்டு நிற்கும். மனசு சலித்தால் துன்பம் உண்டாகும்; சலியாமல் நின்ருல் பேரின்பத்தை அடையும். ஆதலால் இவ்வுலகத்தை நன்மைப்படுத்த முயன்று முன்வந்த மகான்களுக்குப் பற்பல கஷ்டங்கள் சம்பவித்தும், அத்தகைய கஷ்டங்களைப் பாராட்டாமல், தங்கள் கொள்கைகளை நழுவ விடாமல் நிலை நிறுத்தி யிருக்கிருர்கள். எத்தனை வருடக் காலங்கள் ஒருவன் ஐம்புலன்களை அடக்கிச் சமாதி நிலையில் நின்ருலும், அவன் தன் காரியம் பார்ப்பவன் என்று பிறர் நினைத்தபோதிலும், அவன் தன் காரியமும் இழந்து, பரோபகாரம் செய்யாத குற்றத்துக்கும் உள்ளாவான். முற்காலத்தில் வசித்த மகான்களில் (Socrates) ஸாக்ரதீஸ் என்பவரைக் கவனிப்போம். அவர் கிரீஸ் தேசத்து தத்துவ ஞானி. அவர் யாவராலும், அதுமட்டோ, ஒரு தெய்வத்தாலுமே, ஞானி என நன்கு மதிக்கப்பட்டவர். அவர் ஊண் உடைகளில் சுருக்கமான நிலைமையைத் தழுவியவர். மிகவும் தாழ்மையான சித்தமுடையவர்; கோபமென்பது அவரை நாடுவதே கிடையாது. பொறுமைக்கு அவரைச் சிறந்த வைப்பாகக் கொள்ளவேண்டும். அவர் தாம் கண்ட உண்மைகளை உள்ளபடியே பிறருக்கு உபதேசிப்பார். அவர் காலத்தில் நடை பெற்ற தெய்வக் கொள்கைகள் அவருக்கு உடன் பாடு அல்ல. அவர் தனது கொள்கையைப் பயமின்றி உபதேசித்து வந்தமையால், அக்காலத்து மன்னர், அவரைச் சிறையில் வைத்துக் கொலைத் தீர்ப்புக்கு உட்படுத்தினர். அப்பொழுது அவரது நண்பர்கள் சிலர், அவரைச் சிறையைவிட்டு எளிதாகத் தப்புவிக்க முயன்றனர். இவர் அவரது தப்பு வழிகளுக்கு உட்படாமல், அவர்களுக்கு நல்ல வழிகளைப் போதித்து, அவர்கள் முயற்சி சட்ட விரோதமென்றும் நியாய விரோதம் என்றும் அவர்களுக்குத் தெளிவித்து, தாமும் தமது நிலைமையை விட்டு விலகாமல், தம்மைக் கொல்வதற்காகக் குடிக்கக் கொடுத்த விஷத்தைக் குடித்து, அமைதியுடன் உயிர் துறந்தார். அவரது கீர்த்தி இன்றும் அழியாமல் நிற்கின்றது. ஆகையால், உரிய நிலைமையை விட்டு விலகாமல் உண்மைக்கு அடங்கி நடப்பவனே பெருமைக்குப் பாத்திரமாவான்.





# சுயராச்சிய நிபந்தனைகள்

மாஜி ஹைகோர்ட் ஜெட்ஜ்
ஸ்ரீ. T. V. சேஷகிரி ஐயர், B.A., B.L.

நாம் சுய ஆட்சியை அடைய முயலுவது மிகவும் நியாயமுள்ளது. நம்மில் பத்தில் ஒரு பங்குகூட நாகரிகம் இல்லாதவர்களும், நம்முடைய புத்திப் பலத்தில் மூன்றில் ஒன்று கூட இல்லாத தேசத்தவர்களும், சுய ஆட்சியும் சுய சித்தமும் கிடைக்க வேண்டுமென்று கருதுகிருர்கள். நம்முடைய புராதன நூல்களை ஆராய்ந்து பார்த்தால், நம் முன்னேர்கள் சுய உரிமை அநேக விஷயங்களில் பெற்று, அவைகளை நன்ருய் நடத்தி வந்தார்கள் என்பது ஏற்கும். இவ்வித நியாயங்கள் நமக்கு அனுகூலமா யிருந்தாலும், சுய ஆட்சியுடன் கூட, அதற்கு அங்கமான சில நடபடிக்கைகளை அனுசரிக்கா விட்டால், நாம் பெறும் பயன் வியர்த்த மாகிவிடும்.

நம்முடைய இறக்குமதி ஏற்றுமதி முழுவதும், நம்முடைய கைவசத்திலேயே இருக்கவேண்டும். நம்முடைய நாட்டின்மேல் பிறதேசத்தார்கள் படை எடுப்பாராளுல், அவர்களை வெல்லத் தகுந்த கருவிகளைச் செய்ய நமக்குச் சக்தி இருக்கவேண்டும். ஒரு முற்றுகை நேர்ந்தால், அந்தக் காலத்தில் இத்தேசத்தில் ஏராளமாய் உள்ள ஜனங்கள், உணவு முதலானவைகளுக்கு வேறு தேசத்தாரின் உதவியை எதிர் பாராமல், சுயமாகத் தம்மைக் காப்பாற்றிக் கொள்ளப் போதுமானவைகளை அபிவிர்த்தி செய்யவேண்டும். இச் சாதனங்கள் இல்லையாயின், இன்று ஆங்கிலேய இராசாங்கத்தார் நமக்குச் சுய ஆட்சியைக் கொடுத்துவிட்டு விலகுவார்களே யானுல், நாளையதினம், ஆப்கான்ஸ்தான தேசத்தாரும், சைனு, ஜப்பான் தேசத்தாரும் நம்மை ஜெயித்து, தங்கள் கைவசம் செய்துகொள்வார்கள் என்பது நிச்சயம். ஆகையால், சுய அரசாட்சியைத் திண்ணத்துடன் நீடித்து வகிக்க, நாம் முயன்று பெற வேண்டியவை யாவை?

முதலில் நம்முடைய பயிற்சியில் முக்கியமான திருத்தங்கள் செய்யவேண்டும். கிராமங்களுக்குச் சென்ருல், முழுப்படிப்பு, பாதிப்படிப்பு, கால்படிப்புப் படித்த மாணுக்கர்கள், யாதொன்றும் செய்ய இயலாதவராய், துர்ப்புத்தியுடனும், துர்யோசனையுடனும் காலம் கழித்து வருவதைப் பார்க்கலாம். யாவரும் கலாசாலையின் முக்கிய பரீக்ஷையில் தேர்ச்சியடைய விரும்புகிருர்கள்; அநேகம் பேர்கள் தவறிப்போகிருர்கள். தேறினவர்களும், தாங்கள் தெரிந்துகொண்ட கல்வியை உபயோகப்படுத்த முடியாமல் இருக்கிருர்கள். சர்க்கார் உத்தியோகத்தைத் தவிர மற்றச் சாதனங்களுக்கு நாம் பயிலும் கல்வி பயன்பட மாட்டாது. தவிரவும், நமக்கு உபதேசிக்கப்படும் கல்வியால் நாட்டிற்கு என்ன லாபம்? வக்கீல் உத்தியோகம் செய்கிறவர்கள், ஒருவரிடமிருக்கும் திரவியத்தை மற்ருெருவரிடம் சேர்ப்பிக்கச் செய்கிருர்கள். வைத்தியத்தால் நன்மை கிடையாதென்று சொல்லவில்லை; அந்த சாஸ்திரப் பயிற்சியால் வியாதிப் பட்ட ஜனங்களே சுகத்தைப் பெறுகிருர்கள். இவற்ருல் தேசிய லாபம் என்ன? நம்முடைய பூமியிலுள்ள வீரியத்தை அபிவிர்த்தி செய்வதாலும், கைத்தொழிலை நாகரிகமுள்ள கருவிகளினுல் விருத்தி பண்ணுவதாலும், இரும்பு முதலாகிய லோகங்களினுல் செய்யப்பட்டு, வெளித் தேசங்களிலிருந்து வரும் சாமான்களை, நம்முடைய நாட்டிலேயே செய்ய முயலுவதாலும், இன்னும் இத்தகைய மார்க்கங்களில் நம்முடைய புத்தியைச் செலுத்துவதாலும் மட்டும், நாம் சுகத்தைப் பெறலாமே ஒழிய, வேறு விதத்தால் முடியாது.

நம்மில் சில ஜாதியார்கள், விவசாயம் செய்வது இழிவென்றும், வியாபாரம் செய்வது கவுரவக் குறைவானது என்றும் நினைத்துக் கொண்டிருக்கிருர்கள். அவர்களுக்குக் கடவுளால் அளிக்கப் பட்டிருக்கும்சுய புத்தியைச் சரியான விஷயத்தில் அவர்கள் உபயோகிப்பார்களே யானுல், அவர்களும் க்ஷேமத்தை அடைவார்கள்; நாடும் செழிப்புறும்; சுய ஆட்சி வருங்காலத்தில் நம்மை விட்டு அகலாத வண்ணம் நடந்து கொள்ளலாம். இந்த உண்மையை அறியாமல், ஏகோபித்துச் 'சுய ஆட்சி' என்ற முறையையே பாடுவார்களாயின், இத்தேசம் உண்மையான ஸ்வாதந்திரியத்தை ஒரு நாளும் அடைய மாட்டாது.






## ஒரு குட்டிக் கதை

ஸ்ரீ. அ. மாதவையர், சென்னை

இன்னும் வயது இருபத்தைந்துக்கு மேலில்லை; எனினும், தமிழ் மக்கள் வாழ்க்கையிலே, மிட்டாதார் தங்கவேற் பிள்ளை இறங்கி முழுகாத துறை கிடையாது என்னலாம். இப்பொழுது அவர் உடுத்தியிருக்கும் கசங்கிய ஆடையையும், பிடித்திருக்கும் சாமானியச் சிறு சுருட்டையும் (cigarette), வசிக்கும் விடுதியையும் கவனித்தால், சுக்கிர திசை நீங்கிச் சனி திசை அவரை அணுகி விட்டதாகவே தோன்றுகிறது. தனிப் பங்களாக்களிலும், அரமனை போன்ற ஹோட்டல்களிலும், பரிவாரங்களுடன் தங்கின காலமெல்லாம் போய், திருவல்லிக்கேணியிலே, ஒரு முடுக்குத் தெருவிலுள்ள "ஆநந்த விலாசம்" என்னும் சோற்று விடுதியின் மச்சிலில், அவர் தங்கலானுர். கூட இருப்பவர்தான், இப்பொழுது சில மாதங்களாக அவர் ப்ரதானியாய் விளங்கும் ஜமால் கான். 'பசித்தவன் பழங்கணக்குப் பார்ப்பான்' என்னும் வசனப்படி, அவர்கள் ஸம்பாஷணையே பூர்வ கதையை விளக்கும்.

தங்கவேற் பிள்ளை :—மிட்டா, வீடுகள் எல்லாம் ஒற்றி வைத்தாய் விட்டது; 'ஆன் டிமாண்டு' நோட்டுக்களின் மேல் ஏழாயிரத்துக்கு மேலுண்டு கடன்; மூன்று வட்டி நாலு வட்டி கொடுத்தாலும் கூட, இனிக் கடன் கிடைக்க வில்லை. இந்த நாசமாய்ப் போன கிண்டிப் பந்தயம் எல்லாவற்றையும் விழுங்கி விட்டதே.

ஜமால் கான் :—ஜயித்திருந்தாலோ? இன்னும் தான் என்ன? கையிலே ஆயிர ரூபாயும் அதிட்டமும் இருந்தால், ஒரே நாளிலே எல்லாம் சரியாகி விடாதா. உங்கள் அக்காளைக் கேட்டுப் பார்த்தால் ஆயிர ரூபாய் கடனுக வாவது தரமாட்டார்களா?

தங்கவேற் பிள்ளை :—ஊரெல்லாம் தான் ஒரே குழப்பமாய் இருக்கே. இந்த நிலவரிச் சனியன் வந்ததும் வந்தது, எங்கும் அதே பாடாய்த் தானே இருக்கு.

ஜமால் கான் :—அவர்கள் கையிலே ஆயிர ரூபாய் கூட இல்லாமலா இருப்பார்கள்? நீங்கள் முட்டப் பிடித்துக் கேட்டால் தரமாட்டார்களா?

தங்கவேற் பிள்ளை :— அக்காளுக்கு நாலாயிரத்துக்கு மேலே இதுவரை கொடுக்கவேணும். நான் இங்கே மதராஸுக்கு வருவதே அவர்களுக்குப் பிடிக்கவில்லை. இனி ஒரு செப்புக் காசு கூடத் தர மாட்டார்கள்.

ஜமால் கான்:—ப்ரதர்! நேற்றுப் பேப்பரிலே ஒரு சங்கதி கவனித்தீர்களா? இரண்டாயிரம் ரூ. விலையுள்ள வயிரக் கடுக்கன் ஜப்தி செய்து ஏலம் போட்டார்களாம், பத்து ரூவுக்குக்கூடக் கேட்க வில்லையாமே.

தங்கவேற் பிள்ளை :—உள்ளூர் மிராசுதார்களுக் குள்ளே கட்டுப்பாடு அவ்வளவு; வெளியூரார் யார் அப்படி மானங் கெட்டுப் போய்த் துணிந்து கேட்பார்கள்?

ஜமால் கான் :—ஏன், கேட்டால் தலையை வீசிவிடுவார்களோ? சர்க்கார் உதவி இருக்கும் வரை என்ன பயம்?

பிறகு மிட்டாதாரும் ப்ரதானியும் நெடுநேரம் வரை இரகசிய மாய்ச் சதியாலோசனை செய்தார்கள். முடிவில், தங்கவேற் பிள்ளை: "அதுக்கும் தான் நூறு ரூபாயாவது கையில் வேணுமே?" என்று சொன்னார். ஜமால் கான் கொஞ்சம் திகைப்புடன், "அதற் கென்ன, ப்ரதர், தங்கள் ரிஸ்டு வாச்சையோ, மோதிரத்தையோ," என்று சொல்லி, மிட்டாதார் தன்னைப் பார்த்து வெறித்து விழிப் பதைக் கண்டு, மேல் ஒன்றும் சொல்லாமல், தலையைக் குனிந்து கொண்டான். மிட்டாதார், கண்களில் நீர் தளும்ப, பெரு மூச்சு விட்டார். கொஞ்ச நேரத்துக்குப் பின், ஜமால் கான்: "எல்லாம் பத்துப் பதினைந்து நாளுக்குத் தானே; வேறு வழியைக் காணோமே: என்னிடம் ஏதாவது இருந்தால் உடனே கொடுத்து விடுவேன். அமீனுபி கூட அப்படியே சொன்னுள்; ஆனல் அவளிடத்தில் கனத்த நகை ஒன்றுமில்லை," என்று சொன்னன்.

தங்கவேற் பிள்ளை :—ஆகா! அப்படியா! அவளுக்காக வாவது சீக்கிரத்தில் ஏதாவது ஏற்பாடு செய்யவேண்டும்.

ஜமால் கான் :—அது தான் நானும் சொல்கிறேன்: அவள் அதிட்டசாலி; அவள் பேரிலே வைத்தால், கட்டாயம் ஜயிக்கும். எப்படி யாவது நூறு இருநூறு திரட்டி, அங்கேபோய், சமயம் போலே ஆயிரமோ இரண்டாயிரமோ பெறும்படியான நகைகளை அடித்துக்கொண்டு வந்துவிட்டால், பிறகு பத்து நாளிலே பழைய படி ஆகிவிடலாம்.

தங்கவேற் பிள்ளை :—சரிதான் ஜமால்; நீ சொல்வது தான் யுக்தி.



ஜமால் கான் :—நான் கூட வருகிறேன், எல்லாம் பார்த்துக் கொள்ளுகிறேன். ப்ரதர் பேர் வெளியிலே வரவே வேண்டாம்.

தங்கவேற் பிள்ளை :—சரி, சரி; இப்பொழுது சமயத்தை விட்டு விடக்கூடாது."

மிட்டாதார் தங்கவேற் பிள்ளையும், ப்ரதானி ஜமால்கானும், சேவகன் கன்னையாவும் ஐயம்பேட்டை ரயில் ஸ்டேஷனில் வந்திறங்கி, ஒரு வண்டி பிடித்துக்கொண்டு, பகல் பத்து மணிக்கு, நிலவரி கொடாதவரிடம் ஜப்தி செய்த சாமான்களின் ஏலம் நடக் கும் ஓர் ஊரை அடைந்தார்கள். அவ்வூருக்கும் மிட்டாதாரின் சொந் தக் கிராமத்துக்கும் ஏழு மைல் தூரம் தான். ஊருக்கு வெளியே ஜமால் இறங்கி வேருய்ப் போய்விட்டான். மிட்டாதார் மட்டும் வண்டியில் சென்று, ஊரில் ஒரு பந்துவின் வீட்டில் சாப்பிட்டு விட்டுப் பன்னிரண்டு மணி சுமாருக்கு கிராமக் கச்சேரி போய்ச் சேர்ந்தார். அங்கே நாட்டாண்மைக்காரர் பலரும் இதர குடிகளும் கூடியிருந்தனர். ஏலம் போடும் ஸர்க்கார் அதிகாரி மேஜை நாற் காலிகளுடன் வீற்றிருந்தார். மிட்டாதார் தங்கவேற் பிள்ளை பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவர்; நாட்டாண்மைக்காரர் எல்லோ ருக்கும் அவரைத் தெரியும். ஆயினும் அவருடைய கெட்ட நடத் தையினுலும் சகவாசத்தினுலும் அவர்கள் ஒருவரும் இப்பொழுது அவருடன் நெருங்கிப் பழகுவதில்லை. அதை அவர் பொருட் படுத் தாமல், அவர்களில் இரண்டொருவரிடம் ஏதோ சில பேசி விட்டு, அவர்கள் குழுவுக்குச் சமீபத்தில் நின்றுகொண்டிருந்தார்.

முதலில் ஐந்து கல முதல் 200 கலம் வரை நெல் ஏலம்போட, ஒருவரும் கேட்கவில்லை. பிறகு சில சாமான்களை ஏலம்போட, எவரும் கேட்கவில்லை. இன்னுர் சொத்து ஏலம் போடுவது என்று தெரிந்தால் அவர்களுக்குப் பயந்து ஏலம் கேட்க மாட்டார்கள் என்று நினைத்து, அதிகாரி, சொத்துக்களின் உடமைக்காரர் பெயர்களைப் பகிரங்கமாய்க் கூறவில்லை. பிறகு சில ஆபரணங்கள் ஏலம் போடப்பட்டன; கேட்பார் எவருமில்லை. முடிவில், ஏலத்தை நிறுத்து முன், இரண்டாயிர ரூபாய்க்கு மேல் விலைமதிப்புள்ள ஒரு அட்டிகை, வைரமும் சிகப்பும் கலந்து பதித்தது, ஏலம் போடப் பட்டது. முதலில் எவரும் கேட்கவில்லை. கடைசி முறை ஏலங் கூறும் பொழுது, கும்பலின் வெளிப்புறத்தி லிருந்து, "என் கேள்வி ஐம்பது ரூபா" என்ற குரல், திடீரெனக் கேட்டது. உடனே அப்பெருங் கூட்டத்தில் அனைவரும் திடுக்கிட்டு, ஆச் சரியம் அடைந்து, குரல் கிளம்பிய இடத்தை நோக்கலாயினர். மிட்டாதார் தங்கவேற் பிள்ளை மட்டும், உபேக்ஷையாய், மற்றெங் கேயோ பார்ப்பவர் போல் நடித்துக்கொண்டு நின்றார். ஆனல்,

அப்பொழுது அவர் மனம் பறையடித்தது அவருக்குத் தெரியும். ஏலத்தை நிறுத்தும் தறுவாயிலிருந்த அதிகாரி, புதிய உத்ஸாகத்துடன் நிமிர்ந்திருந்து கொண்டு, "சரி 50 ரூ. என்று கூறு; கேட்டவர் யார், ஐயா? இங்கே என் அருகில் வாரும்" என்று மரியாதையாய் அழைத்தார். அப்படியே ஜமால் கான் முன் வந்து அவர் அருகில் நின்றான். எல்லோரும் அவனைப் பார்த்துத் திகைத்து விழித்தார்கள். "சாகிபு கேள்வி 50 ரூ." என்று ஏலம் கூறும் சேவகன் கத்தினான். உடனே, "நூறு" என்றொரு சத்தம் கேட்டது. அது மெய்க் கேள்வியோ குறும்புக் கேள்வியோ என்று விளங்குமுன், "என் கேள்வி 120 ரூ." என்றான் ஜமால். அந்த நகையின்மீது ஸர்க்காருக்கு வரவேண்டிய தொகை 110தான், பின் ஒருவரும் ஏலம் கேட்கவும் இல்லை.

"பணம் கட்டுகிறீரா?" என்று அதிகாரி கேட்டார். "இதோ தயார்" என்று, ஜமால் கோட் பையிலிருந்து பணப் பையை எடுத்து இரண்டு நோட்டுக்களை நீட்டினான்.

**அதிகாரி**—மேல் அதிகாரி ஏலத்தைக் காயம் செய்த பின்பு உமக்கு நகை கிடைக்கும்.

ஜமால் கான் :—அதெப்படி? நான் தான் பூராப்பணத்தையும் கட்டி விடுகிறேனே. திரும்பியும் யார் இதற்காக வருகிறது?

**அதிகாரி** :—தஞ்சாவூரிலோ, கும்பகோணத்திலோ, வேண்டுமென்றாலும் வாங்கிக்கொள்ளும்.

ஜமால் :—நமக்கு மதராஸ்; இன்றே ரயிலேற வேண்டும்; அதெல்லாம் முடியாது.

**அதிகாரி** :—(சிறிது நேரம் யோசித்து) நகை இரண்டாயிரத்துக்கு ஓடும்; நீர் கேட்டது 120 ரூ. தான்; ஒரு வேளை ஏலம் காயமாகாவிட்டால், நகைக்கு யார் ஜவாப்தாரி? ரொக்க ஜாமீனோ, அல்லது நபர் ஜாமீனோ கொடுப்பீரா? அப்படியானால் இப்பொழுதே நகையைத் தந்து விடுகிறேன்.

ஜமால் :—கையிலே அவ்வளவு தொகையில்லை; நமக்கு இது அயலூர்; யாரும் அறிமுகமில்லை; ஆனாலும், (நாலாபக்கமும் நோக்கிவிட்டு) அதோ நிற்கிறார்களே, குட்டேரி மிட்டாதார், அவர்கள் ஜாமீன் போதுமா?

இதைக் கேட்டவுடன் எல்லோரும் மிட்டாதாரைப் பார்த்துத் திரும்பினர். அதிகாரியின் குமாஸ்தா அவருடைய காதில் இரகசியமாய் ஏதோ சொன்னான். அதிகாரி புன் சிரிப்புச் சிரித்துக் கொண்டு, "போதும்; குட்டேரி மிட்டாதாரவர்கள் ஜாமீன் போதும் இந்த நகைக்கு" என்று சொன்னார்.

தங்கவேற் பிள்ளை, மிக்க வெட்கத்தோடு முன் வந்து, "அவரை நான் அறிவேன்; அவருக்கு நான் ஜாமீனாக நிற்கிறேன்"



என்றார். இதைக் கேட்டவுடன், அங்குள்ள நாட்டாண்மைக்காரர், குடிகள், பலருக்குத் திடீரெனத் தொண்டைக் கட்டு வந்து, "தூ! தூ!" என்று காறி உமிழ ஆரம்பித்தனர். பேய் வேஷம் போட்டால் ஆடித் தீரவேண்டுமே. முடிவில், அதிகாரி, மிட்டாதார் ஜாமீனின் பேரில், அட்டிகையை ஜமால் கான் கையில் கொடுத்து விட்டார். உடனே இருவரும் அதிவேகமாய் வெளிக் கிளம்பி விட்டனர். தங்கவேற் பிள்ளை மற்றெவருடனும் பேசவே யில்லை. இதற்குள் மாலை மணி ஐந்தாகிவிட்டது. அவர்கள் வந்த வண்டியைக் காணவே யில்லை; வேறு வண்டியும் அவ்வூரில் கிடைப்பதா யில்லை. வேலைக்காரன் தலையில் படுக்கையையும் தோற் பையையும் எடுப்பித்துக் கொண்டு, மூவரும் ரயில் ஸ்டேஷனை நோக்கி நடக்கலாயினர்.

நினைத்த காரியம் கைகூடி விட்டதென்று ஜமால்கானுக்கு உண்டான ஸந்தோஷம் கொஞ்சமில்லை. தங்கவேற் பிள்ளையோ எனில், வெட்கமும் பயமும் அவர் மனத்திற் குடிகொண்டு விட்டன. உள்ளூரத் தன்னையே மிகவும் இகழ்ந்து கொண்டார்; ஜமால்கானைச் சிறிது வெறுக்கவும் செய்தார். சென்னைக்குச் சென்றவுடன் நகையைப் பணமாக்கி, மீண்டும் ஒரு கை பார்த்து, அமினாபீயின் அதிஷ்டத்தினால், போன ஸொத்தை யெல்லாம் திருப்பி விடலாமென்று அவன் பல விதமாய்ப் போதித்ததனால் தான், ஒருவாறு அவர் சாந்தம் அடைந்தார். எனினும், பொழுது இருட்டிய பின், அவர் மேற்போக இணங்க வில்லை.

"இதோ தெரிகிறதே, இது தான் குறட்டேரி; என் அக்காள் இங்கேதான் இருக்கிறாள்; அவள் வீட்டில் இரவு தங்கி, அவளையும் பார்த்துவிட்டு, பொழுது விடிந்த பின், ரயிலுக்குப் போவோம்; இப்போது மேற் சென்றால் மோசம் வந்துவிடும்" என்று, ஒரே பிடிவாதமாய்க் கூறி, அப்படியே செய்யலானார்.

தங்கவேற் பிள்ளையின் தமக்கை ஞானவடிவம்மாள், ஒரு விதந்து; அவளும் ஒரு மிட்டாதாரின் மனைவியாய் வாழ்ந்தவள்; மைனர் குழந்தைகளுக் காகத் தானே மிட்டாவை மேற் பார்த்து வந்தாள். தன் தம்பி திடீரென்று வந்தவுடன் அவளுக்கு ஸந்தோஷமாயும் ஆச்சரியமாயும் இருந்தது. அவனைப் பற்றி அவளுக்குத் தீராத கவலையும் மனக்கிலேசமும் உண்டு. க்ஷேம லாபம் விசாரித்தானபின், தங்கவேற் பிள்ளை தன் தமக்கையைப் பார்த்து, "அக்கா! இதைப் பத்திரமாய் உருக்குப் பெட்டியில் வைத்திரு; விடியற்காலம் வாங்கிக் கொள்ளுகிறேன்" என்று சொல்லி, அவள் கையில் அட்டிகையைக் கொடுத்தார். அவள் அதை வாங்கித் திருப்பித் திருப்பிப் பாரத்துத் திகைப்புற்று: "தம்பீ! உனக்கு ஏது இது?" என்று கேட்டாள்.

தங்கவேற் பிள்ளை :--இதுவா, என் சிநேகிதர் ஜமால் கான் சாயுபுவுடையது; அவர் பெரிய நகை வியாபாரி; அவர் கூடத் தான் நான் ஒரு காரியமாக வந்தேன் '' என்று, தட்டித் தடுமாறிப் பதில் உரைத்தார்.

ஞானவடிவம்மாள்:—'' என்னிடத்திலா இதெல்லாம்? என்னுடைய அட்டிகையே இது. ஸர்க்காருக்கு 110 ரூ. கிஸ்து கட்ட வேண்டும். அநியாய வரியென்று, ஊருடன் ஒத்து, நான் கட்டவில்லை. ஜப்திக்கு வந்த பொழுது இதைக் கொடுத்தேன். என் அட்டிகையே இது. உன் பொய்யையும் புரட்டுகளையும் தூர் நடத்தையையும் இன்னும் நீ விட்ட பாடில்லையே. சூது, குதிரைப் பந்தயம், கூத்தியாள் என்றெல்லாம் கெட்டது போதாமே, இப்படி மானக்கேடான ஊர்க்கேலியான தொழிலுக்கும் வந்து விட்டாயா? நல்ல வியாபாரமே செய்து விட்டாய் இன்று '' என்று சினந்து கூற, மிட்டாதார் தங்கவேற் பிள்ளை, வெள்கி, ஒடுங்கி, தலைகுனிந்து கண்ணீர் சொரிந்து வாய் பேசாமல் நின்றார்.




இந்திய ஊழியச் சங்கத்தின் அங்கத்தினர்

ஸ்ரீ. K. G. சிவஸ்வாமி, B. A.,

I. தேசத்தின் செல்வ விருத்தி.

ஏந்த தேசமும் செழிக்க வேண்டுமாகில், அத் தேசத்தார், தாங்கள் உபயோகிக்கும் பண்டங்களுக்குச் சமமாகவாவது, அல்லது அதிகமாகவாவது, உற்பத்தி செய்யவேண்டும். செலவாகும் சரக்குகளுக்குக் குறைந்தே ஓர் தேசத்தார் விளை பொருள்களையும் செய் பொருள்களையும் உண்டு பண்ணினால், அத்தேசம் ஒரு நாளும் சீர்ப்படாது. மானிட வாழ்க்கையில் ஜனங்கள் தாங்கள் ஜீவிப்பதற்கு வேண்டிய சௌகரியங்களைக் குறைத்துக் கொள்வது மாளாது. அதனால் ஜனங்களின் தேக சௌக்கியமே நாளுக்கு நாள் குன்றும்; ஆகவே, ஒவ்வொரு மனிதனும் தேசத்தின் பொருள்கள் எவ்வாறு விருத்தி செய்யப்பட வேண்டு மென்று யோசித்தல் வேண்டும். இப்பொழுது தேசச் செல்வ விருத்திக்கு இடையூறுக ளென்ன? விவசாய அபிவிருத்திக்கு வேண்டிய சாத



னங்களைக் கூட்டாக வாங்கி விளை பொருள்களை விருத்தி செய்ய லாம். காலத்தை வீணுக் கழிக்காமல், சிறு வீட்டுக் கைத்தொழில் களை நடத்தலாம். விவசாய அபிவிருத்தியில் ஆழ்ந்து வேலை செய்யும் குடிகளுக்கு வேண்டிய நாணயமோ, அல்லது அவர்கள் உற்பத்தி செய்யும் சரக்குகளை விற்றுக் கொடுக்கவோ, அவர்களுக் குத் தேவையானவைகளை வாங்கிக் கொடுக்கவோ, ஏற்பட்டுள்ள பல வியாபாரிகளின் அளவிலா வேலையை, விவசாயிகளே ஒன்று சேர்ந்து செய்து கொள்வதால், ஷை வியாபாரிகளும் உண்மைச் செல்வ விருத்திக்கு ஆதாரமான தொழில்களைக் கைபிடிக்கக் காரணமேற்படும். தேசத்தின் செல்வம், பிராணி வர்க்கம், மானிட வர்க்கம் இவைகளில் ஏற்படும் அழிவுகளாலும் குறை படுகிறது. ஆடு மாடுகள் சில தொத்து நோய்களால் மரிக்கின்றன. இவை களே விவசாயிகளின் செல்வமாகும். வேலை செய்யும் கூலிகள் படிப்பின்மையாலும், தங்களுக்கே பெரும் நோக்கங்க ளில்லாததாலும், தங்கள் வாழ்க்கையை மேம்படுத்திக் கொள்ளும் அவாப் பொங்கிப் பெருகாததாலும், தேசச் செல்வம் குறைபடுகிறது. இவர்களுக்கு ஊக்கமும், உற்சாகமும், தன் நம்பிக்கையும், தன் மரியாதையும் உண்டாக வேண்டும். இன்னும் கோர்ட்டு வியாஜ்ஜியங்களாலும், நிலங்கள் துண்டு பட்டுப் பயிர் செய்யப் படுவதாலும், விளைவுகளுக்குப் பூச்சிகளால் ஏற்படும் நஷ்டங்களாலும், கம்மாய்களின் சீர்திருத்த மின்மையாலும், பலவாறாக விவசாயிகள் கஷ்டப்படுகிறார்கள். மேலும் படித்தவர்கள் தங்கள் விவேகத்தை கோர்ட்டுகளிலும், சரக்குகளை வாங்கி அதிக விலைக்கு விற்பதற் கேற்ற முறைகளிலும் செலவிடுகிறார்களே யொழிய, விளைவுகளை அதிகப்படுத்துவதில் உபயோகிப்பதில்லை. பணத்தைச் சிலர் சேர்த்துத் தங்கள் வீடுகளில் அடக்கம் செய்து கொள்ளுகிறார்களே யொழிய, விவசாயக் கைத்தொழில் அபிவிருத்திக்குக் காரணமான பாங்கிகளில் போடுவதில்லை. இவ்வாறாகத் தேசம் பல முறைகளில் சீர்பட வேண்டியிருக்கிறது.

2. விவசாய அபிவிருத்தி சாதனங்கள்.

ஒவ்வொரு விவசாயியும் தன் தொழிலை நடத்துவதற்கு மூன்று விதமான வேலைகளைக் கையாளவேண்டும். விதை, உரம், மாடு, கருவிகள் இவைகளை விவசாயத்திற்காக வாங்கவேண்டும். இரண்டாவது, தானியங்களைச் செம்மையாய்ப் பயிர் செய்யவேண்டும். மூன்றாவது, ஷை தானியங்களை சரியான விலைக்கு விற்று லாபமடையவேண்டும். இவைகளில் இரண்டாவது வேலை விவசாய இலாகாதாரின் சகாயத்தைக் கொண்டும், முதலாவதையும் மூன்றாவதையும் கூட்டுறவு இலாகாதாரின் சகாயத்தைக்கொண்டும் நடத்தலாம். ஆனால் விவசாயத்தொழில் மற்றக் கைத்தொழில்கள்

மாதிரி அல்ல; மற்றத் தொழில்களில் மனிதனுடைய வல்லமை யால் இயற்கைப் பொருள்களைத் தன் இஷ்டம்போல் சரக்குக ளாக்கலாம். பஞ்ச பூதங்களின் குணங்களும் மனிதன் வசமாகி உபயோகிக்கப் படுகின்றன. விவசாயத்திலோ மனிதன் பஞ்ச பூதங்களின் வசமாகிறான். கால மழையும், பூச்சிகளின் நிர்ப்பந்த மின்மையும் விவசாயத்திற் கவசியம். நிலம் கொடுக்கக்கூடிய வருமானத்தைத் தான் கொடுக்கும். தொழிற்சாலையில் இயந்திரத் தால் தீக் குச்சிகளும், குண்டூசிகளும் செய்வதுபோல், ஏராளமாய் நெல் தானியங்களை இயந்திரங்களால் செய்துவிட முடியாது. நிலத்தில் ஈடுபட்டு வேலை செய்யும் மனிதனுடைய சிரமத்திற்கு, அந்நிலம் கொடுக்கும் வருமானம் வரம்பாகும். ஆனல் அதிகப் பணத்தைச் செலவிட்டு உரங்களாலும், சரியான மேற்பார்வையா லும், நல்ல விதைகளாலும், சாதாரண நிலத்தின் வருமானத்தை விருத்தி செய்யலாம். தண்ணீர் இல்லா இடங்களில் கிணறுகளா லும், கம்மாய் சீர் திருத்தத்தாலும், கால்வாய்களைச் செம்மைப் படுத் துவதாலும் விவசாயத்தை அபிவிருத்தி செய்யலாம். இதற்கெல் லாம் பணம் வேண்டும்.

## 3. தற்கால விவசாயியின் நிலைமை.

தற்கால நாகரீகம் பரவுவதற்கு முன்னல் விவசாயிகள் சொற்ப சௌகரியங்களோடு உண்டு களித்து வந்தார்கள். ஒவ்வொரு கிராமமும் அதற்கு அவசியமான விளைபொருள்களைப் பயிர் செய்தும், தொழில்களை நடத்தியும் வந்தது. இப்பொழுது சீமை நாடுகளுக்கு வேண்டிய பயிர்கள் பயிராக்கப்படுகின்றன. கம்புச் சோறு சாப்பிடுகிறவர்கள் அரிசிச் சோறு உண்கிறார்கள். எவ் விதச் சாமான்களும் அநேகமாய் வெளியிடங்களிலிருந்து பல வியாபாரிகள் மூலமாய் வரவேண்டியிருக்கிறது. நிலக்கடலை, பருத்தி, புகையிலை பல இடங்களுக்குச் செல்கின்றன, எந்நாளும் பயிர் செய்பவனே, வியாபார முறைச் சக்கரம் உருண்டு புரளுவதை அறியாது, தன் சரக்குக்களை விற்கவும் தனக்குத் தேவைகளை வாங்கிக் கொள்ளவும் அபரிமிதமான வியாபாரிகளுக் குள்ளா கிறான். வியாபாரத்தில் சாணக்யத்தாலும் சாமர்த்தியத்தாலும் ஏற்படும் லாபங்களை முன்னிட்டு, அநேகர் வியாபாரத் தொழிலி லேயே மோகம் கொள்ளுகிறார்கள். போதாக்குறைக்கு, பணமில் லாமல் விவசாயம் நடத்தும் நாள் போய்விட்டது. விவசாயிகள் தற்காலம் உற்பத்திசெய்யும் விளைவுகளுக்குப் பல செலவுகள் ஏற்படு கின்றன. பணமில்லாமல் உரம் வாங்கவோ, கூலிகளுக்குச் சம்பளம் கொடுக்கவோ இயலாது. குடும்பச் செலவுகளோ பெருத்துவிட்டன. ஆகையால் நிலத்தின்மேல் நாளுக்கு நாள் கடன் வாங்கியே ஜீவனமாக வேண்டியிருக்கிறது.



## 4. விடுதலை.

இந்நிலையிலிருந்து விடுதலை உண்டா? எவ்வளவுக்கு அவ் விடுதலை சாத்தியமாகும்? விவசாயிகள் கூட்டாக ஒன்று சேர்ந்து தங்களுடைய நாணயத் தேவைகளைப் பூர்த்திசெய்து கொள்ளலாம். தங்களுடைய சரக்குக்களை விற்றுக் கொள்ளலாம். சொற்பம், சொற்பமாய்ப் பயிரிடும் விவசாயி களுள்ள நாட்டிலே அவர்களுக்குக் கஷ்ட மதிகம். விவசாயிகளுக்குப் பணத் தட்டுப் பல விதமாய் ஏற்படலாம். இராமனுதபுரம் போன்ற ஜமீன் சம்ஸ்தானங்களில், நிலத் தீர்வையைத் தானியமாகக் கொடுக்கவேண்டியிருக்கிறது. இதனல் தானியத்தைப் பங்கு செய்வதில் குடிகளுக்கும் சம்ஸ்தான உத்தியோகஸ்தர்களுக்கும் சிப்பந்திகளுக்கும் பேதங்களேற்படுகின் றன. பலவான் காரியம் ஜயமாகிறது. சம்ஸ்தானத்திலும் நெல் தானியம் போட்டால் தான் அதிக வரும்படி பெற முடியுமாதலால், இதர தானியங்கள் பயிர் செய்வதைத் தடுக்கிறார்கள். கம்மாய்கள் சீர்திருத்த மின்மையால், நிலங்கள் சாகுபடியாகாமல் போகின்றன. இலங்கை போய் வியாபாரம் செய்து வந்து தங்கள் பணத்தை நிலங்களில் போடுகிறார்கள். இவர்களுக்கு விளைவில் அதிகமான சிரத்தையில்லை. விவசாயிகளும் வருமான மில்லாமல், மலேயா, பினங் காப்பித் தோட்டங்களுக்குக் கூலிகளாகப் போகிறார்கள். செய்யும் தொழிலால் வருமான மில்லாம லிருக்க, அத்தொழிலாளி கள் ஒன்று சேர்ந்தால், அவர்கள் சங்கம் ஏற்படுத்திக் கொண்டதற் காக யார்தான் கடன் கொடுப்பார்கள்? சில இடங்களில் விவசாய வரும்படி யில்லாவிடினும், சாமர்த்தியத்தால் குடிகள் ஆடு மாடு வளர்த்தோ, காய் கறிகள் பயிர் செய்தோ, தங்கள் வரும்படியை அதிக மாக்கிக் கொள்ளுகிறார்கள். நமது நாட்டிலோ வீட்டுத் தொ ழில்கள் ஏற்படவில்லை. விவசாய வருமானம் அதிகப்படத் தக்க முறைகளை விவசாய இலாகாதார் கற்பிக்க வேண்டும். ஆகவே எங்கெந்த இடங்களில், விவசாயிகள் ஊக்கமாய்த் தங்கள் தொழிலை நடத்த விரும்புகிறார்களோ, எங்கெல்லாம் விவசாயத்திற்கு மழை யின்மையால் கேடில்லாமல் வருமானம் வேலைக்குத் தக்கதாயிருக் கிறதோ, அவ்விடங்களில் மட்டும் குடிகளுக்குத் தங்கள் தொழிலை நடத்த நாணயம் கிடைக்கும். ஐக்கிய நாணயச் சங்கங்களால், செழிப்பாயுள்ள குடிகள், தங்கள் வீட்டு விவசாயச் செலவிற்காக, அறுவடையாகும் வரை சாவகாரிடம் கடன் வாங்குவதால் ஏற்படும் நஷ்டத்தையே நீக்கிக்கொள்ளலாம். கடனுக்கு அதிக வட்டி கொடுத்து, தங்கள் தான்யங்களை இழக்காமல் செய்து கொள்ளலாம்; ஆனல், தான்யமே நிலத்திலிருந்து கிடைக்காவிட்டாலோ, அல்லது சொற்பமாய்க் கிடைத்தாலோ, சொற்ப வட்டிக்குக் கடன் வாங்குவ தால், விளைவு அதிகப்படாது.

## 5. விவசாயிகளுக்குத் தக்க வருமானமிருந்தும் கடன் கிடைக்குமா?

ஆகவே ஐக்கிய நாணயச் சங்கஸ்தாபனத்திற்கும் ஓர் வரம்புண்டு. சங்கமானது சாமர்த்தியமான விவசாயிக்கு நாணயத்தைக் கொடுத்துதவுமே யொழிய, ஒருக்காலும் சாமர்த்தியத்தை உண்டு பண்ணுது. மழையைக் கொண்டு வராது. விளைவை அதிகப் படுத்தாது. ஆனுல் விவேகமில்லாது, பின்னுல் வரும் செலவுகளுக்கு முன் புத்தியோடு யோசனை செய்யாமல், அதிக வட்டிக்குக் கடன் வாங்குவதால் தன் தானியங்களை இழக்கும் விவசாயிகளுக்கு ஆதாரமாக இருத்தல் கூடும். விவசாயிகளுக்கு, மற்றத் தொழில் செய்பவர்களுக்குப்போல, பணம் ஏராளமாகக் கிடைக்கிறதில்லை. நகர பாங்கார் நிலத்தின்மேல் கடன் கொடுக்கச் சந்தேகிப்பார்கள். நிலத்தை மதிப்பிடுவது கஷ்டம். கிராமங்களில் போய் வசூல் செய்வது கஷ்டம். விவசாயிகளோ அதிகமாய்ப் படிப்பில்லாதவர்கள். நிற்க, கிராமங்களில் பணத்தைச் செலவிட அறியாமல், எத்தனையோ மிராசுதார்க ளிருக்கிறுர்கள். அவர்களிடமே ஏழைக் குடிகள் அதிக வட்டிக்குக் கடன் வாங்கவேண்டும். சொற்ப நிலங்க ளுள்ளவர்களுக்கு நாணயம் கிடைப்ப தரிது. நிலமில்லாதவர்கள் விவசாயம் நடத்தி வரலாம். இவர்களுக்கு விவசாயச் செலவுகளுக்கு யார் தான் கடன் கொடுப்பார்கள்? ஆகவே, ஜர்மனி, ஐர்லாந்து போன்ற தேசங்களில், இம்மாதிரியான கஷ்டங்களிலிருந்து விவசாயிகளை விடுவிக்கும் பொருட்டு, அத்தேசப் பிரமுகர்கள் ஓர் யோசனை செய்தார்கள். விவசாயிக ளனைவரும் ஓர் கிராமத்தில் ஒன்று சேர்ந்து, தங்கள் சொத்து முழுவதையும் ஜாமீனுக வைத்து, தங்கள் மெம்பர்களில் யாவராலும் ஏற்படும் நஷ்டங்களுக்குப் பொறுப்பாயிருந்து கொண்டு, வெளி பாங்கிகளில் கடன் வாங்குவ தாகும். இம்முறைச் சங்கங்களுக்கே வரையறுக்கப்படாத ஐக்கிய நாணயச் சங்கங்க ளென்று பெயர். 'வரையறுக்கப்படாத' என்றுல், வரையறுக்கப்படாத பொறுப்பை யுள்ளது. இவ்விதச் சங்கங்களின் முக்கிய குண மென்ன வென்றுல், நாணயத்தை உற்பத்தி செய்வதாகும். வெளி பாங்கிகளில், எல்லா மெம்பர்களும் சங்க நஷ்டங்களுக்கு ஜவாப்தாரி என்பதால், ஏழைகளுக்குக் கடன் கொடுத்து உதவுகிறுர்கள். ஆனுல் இக்கடனைசங்க வாயிலாயில்லாமல் ஏழை விவசாயிகள் பெறமுடியாது. சிலருக்கு பூ சொத்து இருக்கலாம். சிலருக்கு பூ சொத்து இல்லாமலிருக்கலாம். சிலர் பிறர் நிலத்தைப் பயிர் செய்ய வாங்கலாம். சிலர் கூலி வேலையே செய்து ஜீவனத்தை நடத்தலாம். வெளி பாங்கில் செல்வ நிலையில் குறைந்தவர்களுக்குக் கடன்



கொடுக்கமாட்டார்கள். அதிக நிலமுள்ளவர்கள் ஓர் கிராமத்தில் மிகவும் சொல்பமா யிருக்கலாம். மற்றுமுள்ள விவசாயிகளுக்கு, விவசாயச் செலவில்லையா? இவர்களுக்கு யார்தான் கடன் கொடுப்பார்கள்? ஆனுல் எல்லாரும் ஒன்று சேர்ந்து கடன் வாங்கினுல், வெளி பாங்கார் மொத்த சொத்தை ஈடாகக் கவனிப்பார்களே அல்லாது, ஒவ்வொருவருடைய செல்வ நிலையையும் கருத மாட்டார்கள். ஏழைகளுக்கு நாணயம் வேண்டுமாகில் வரை யறுக்கப்படாத பொறுப்புள்ள ஐக்கிய சங்கமே இதை உண்டாக்கும்.



## சர்வ சமய சமரச தர்சநி






1. "கருமத்தை விடுவதும், ஈசுவரார்ப்பண புத்தியாய்க் கருமம் செய்வதுமாகிய இவ்விரண்டும், மோக்ஷத்தைக் கொடுக்கத் தக்கவைகள். அவற்றில், கருமத்தை விடுவதைக் காட்டிலும், பலத்தில் அபேக்ஷையின்றி ஈசுவரார்ப்பண புத்தியாய்ச் செய்யப்படும் கரும யோகம் சிரேஷ்டமானது."—பகவத் கீதை.

2. "மனித வாழ்வுக்கு உணவுமட்டும் போதாது; அறிவும் இன்றி யமையாததாம்"—பைபிள்.

3. "செவிக்குணவு இல்லாத போழ்து, சிறிது வயிற்றுக்கும் ஈயப் படும்"—திருக்குறள்.

4. "என்பே விறகாய் இறைச்சி அறுத்திட்டுப்
பொன்போல் கனலில் பொரியுற வறுப்பினும்
அன்போ டுருகி அகம் குழைவார்க் கன்றி
என்போன் மணியினை எய்த ஒண்ணுதே."—திருமூலர்.

5. "என்றும் அழிவிலா அவனே இறைவனும்;
அயர்தியும் உறக்கமும் அவனை அணுகிடா;
வானுள மண்ணுள யாவும் அவனதே;
விண்ணெலா மண்ணெலாம் விளங்கு அவன் ஆசனம்;
அன்னவை பேணுதல் அவற்கொரு சுமையன்று;
'அவனே உயர்ந்தவன், அவனே பெரியவன்,
அவனே கடவுள்' என்பீர்; 'இணையிலான்,
பின்னம் பிறவியிலான்,' என்பீரே."—குரான்



## எங்கள் கண்ணன்

எங்கள் வீட்டில் ஓர் கண்ணன் இருக்கிறான் ;
தங்கக் கட்டி அவன் உடல் கால் கை தாம் ;
மங்க லங்கள் நிரம்பி மலர் முகம்
பொங்கு பூரண சந்திரன் போலுமால் ;
களை பொருந்தி, எழுந்து, பரந்து, நீண்டு,
இளமையும், அழகும், மனத் தூய்மையும்,
பர பரப்பும், இனிமையும், தண்மையும்,
கரவில் பேதைமை யும், பிர காசமும்,
நெஞ்சின் ஆர்வமும், அஞ்சலில் வீரமும்
களி நடம்புரி கண்களைக் காண்பவர்
இளமை மீளவும் எய்தி மகிழ்வரால் ;
அன்பில், அதிசயத்தில், வினை வெற்றியில்,
முன் பின் எண்ணுதல் இன்றி முளைத்திடும்
இன்ப மிக்கு, அவன் உள்ளத் தெழுந்து ஒலி
கல கலத்த சிரிப்பினைக் கேட்பவர்
கவலை யாவும் மறந்து சிரிப்பரால் ;
நித்தம் கண்ணன் நிகழ்த்திடும் லீலைகள்
பித்தனும் பெருமான் விளை யாடலே :
மானின் கன்று மலைத்திடத் துள்ளுவான் ;
ஆனின் கன்றிற் குழைந்து அயர்வு எய்துவான் ;
சாடி ஆடித் தறையிற் புரளுவான் ;
ஆடு மாடுகள் கூடவே ஓடுவான் ;
வான் பறக்கும் குருவி நிழலினைத்
தான் தறைதனில் சாரத் தொடருவான் ;
'நான் ஓர் குட்டிக் குதிரை' என்றே, உடல்
கூனிக், கைகளை ஊன்றிக் குதித்துத், தன்
மேனி வேர்வை பொழிய, விரைந்து சென்று,
அங்கும் இங்கும் அலைந்து, கனைத்து, உதைத்து,
எங்கும் யாரையும் ஓடித் துரத்துவான் ;





வில் எடுத்து, விசையன் எனத், தனது
உள்ளமும் ஐம் பொறி களும் கண்ணுற,
அம்பை எய்குவான் ; அம்பு பலித்து உயிர்
துன்பம் எய்திடின், கண்ணீர் சொரிதர
வெம்பி வெம்பி அழுது வெதும்புவான் ;
உடல், உயிர், புலன், உள்ளம், உணர்வெலாம்
எழுது கோலின் முனையில் இசைந்திடப்
படம் வரைந்து, பசியு மறந்து, நீள்
பொழுது போக்குவான்; புஸ்தகம் கைக்கொளின்,
கதை ரஸக் கடலின் கரை காண்கிலான்,
இதழ்கள் கண்கள் புருவங்கள் நெற்றி தாம்
இதயம் ஏய்வ கண்ணுடியில் காட்ட, மற்று
எதையுமே மறந்து யோகியே ஆகுவான் ;
கண்ணன் கீதங்கள் பாடத் தொடங்குமேல்
மண்ணும் கல்லும் உருகி மயங்குமால் ;
பின்னர் மக்களைப் பேசவும் வேண்டுமோ ?
இன்ன வண்ணனே யாகும் எம் கண்ணனே.
கூழ் குறைந்து குழை வயிற் றேழைகள்
தாழு வாயில் தடுக்கில் அடைக்கவும்,
நஞ்ச கூரை ஒழுகி நனைதலால்
தஞ்ச மின்றித் தவிப்ப வராயினும்,
குடிசை மட்டும் ஓர் கண்ணனைக் கூடுமேல்,
மடி நிறை பொன் உற்றுரில் மகிழ்வரே ;
மாட மேடைகள் வாய்ந்ததோர் மாளிகை,
பீடு போக்கியங் கள் பல பெற்ற தொன்று,
ஈடில் கண்ணனை இல்லதேல்,
காடெனத் தகும் தன்மையில் காயுமே.

——அமுதகவி



# மொழி பெயர்ப்பு

1. அஸதோமா ஸத்கமய ;
   தமஸோமா ஜோதிர்கமய ;
   ம்ருத் யோர்மா அம்ருதம் கமய."

   என் பொய் ஒழித்து, உளம் மெய்யில் நடாத்துக ;
   என் இருள் ஒழித்து, அறிவு ஒளியில் நடாத்துக;
   என் அழிவு ஒழித்து, அழியா நிலை அருள்கவே !

2. " O hidden Life, vibrant in every atom,
   O hidden Light, shining in every creature,
   O hidden Love, embracing all in oneness,

   May each, who feels himself as one with Thee,
   Know he is therefore one with every other."

   அணுத் தொறும் ஒளிந்துறைந்து அசைத்திடும் உயிரே,
   உயிர் தொறும் ஒளிந்துறைந்து அவிர் தரும் ஒளியே,
   அனைத்தினும் ஒளிந்து ஒருங்கு அணைத்திடும் அன்பே,

   உன்னுடன் ஒற்றுமை உணரும் ஒவ்வொருவனும்,
   அன்னதால், தான் பிறர் அயலலாது அறிகவே.

3. "Sad is it to be weak,
   'Tis sadder to be wrong,
   But if the strong God's statutes break,
   'Tis saddest to be strong."

   மெலிவு துயரே; தவறு மேல் துயரமே;
   மெலியா வலியினர் அறநெறி மீறிடின்,
   மெலியா வலிதான் மேலிலாத் துயரமே.

4 "Homo sum: humani nihil a me
   alienum puto."

   நான் ஒரு மானுடன் : நான் மதியாதன
   மானுட வாழ்வில் இலை.

5. "We call our fathers fools, as wise we grow;
   No doubt, our wiser sons will call us so."

   அறிவோங்க, நம் முன்னோர் அறிவிலிகள் என்குவம் யாம்;
   உறுதி, நமையும் பின்னோர் அவ்வண்ணம் உரைப்பதுவே.

—இருமொழியாளன்.



# கூட்டுறவு இயக்கம்

கூட்டுறவு ஸங்கங்களின் கௌரவ உதவி ரிஜிஸ்ட்ரார்

ராவ் ஸாகிப் M. S. சேஷாசல ஐயர், திருவண்ணமலை

பூவுலகில், மானிட வாழ்க்கையில். பிறவி முதல் மூப்பு வரை, ஒவ்வொருவரும் இயற்றும் போராட்டத்தும் சேர்ந்தது உயிர் வாழ்க்கையாம். உலகில் உயிர் வாழ்க்கைக்குச் செல்வம் இன்றியமையாதது. ஒவ்வொருவரும் உலக சுக மனைத்தையும் அடைய விரும்புகின்றனர். இதை யளிக்கும் செல்வத்தை யாவரும் நாடுகின்றனர். "பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை" என்றார் நாயனார். பொருளை அடையும் சாதகங்க ளான, தேகபலம், புத்தி, மனம் முதலிய திரி கரணங்களையும், மனோ நிலைக் கேற்ப நல்வழியிலோ தீயவழியிலோ, நடாத்தி, செல்வத்தைச் சேர்க்கப் பாடுபடுகின்றனர். தற்காலம் மனித வாழ்க்கையில் பரம சாதுவாய் மலைபோல் குவிந்திருக்கும் செல்வத்தை ஒருங்கே யடைய ஒருவர்க்கொருவர் பெரும் போராட்டம் நடை பெற்று வருகிறது. தேக பலத்தால் ஈட்டிய பொருளை மனோ பலத்தால் கொள்ளை கொள்வதும், மனோ பலம் உடையாரைத் தேக பலமுடையோர் வருத்துவதும், இப்படி பலவித கஷ்டங்களால் மனோ நிலைமை பிளவுபட்டு, ஒவ்வொருவரும் தன்னலம், தன்வாழ்வு தன் சுகத்திலேயே ஆழ்ந்து, பிறரிருப்பே மறந்து, சுய நலம் போற்றி வருகின்றனர். நம் இந்தியர்களுக்குள், சனாதனமாய் மூதாதோர்கள் நமக் கிட்டிருக்கும் கட்டளைகளில் அவமதிப்பும், மதப்பற்றின்மையுமான நாகரீகப் படிப்பும், இந்நிலைக்கு ஓர் சாதகமே யாம். ஜீவயாத்திரையின் உண்மைப் பொருளை உணர்ந்து, கடவுளை வழிபட விரும்பும் ஒவ்வொருவனும், கடவுளின் சிருஷ்டி அம்சமான, ஒவ்வொரு ஜீவனிடத்திலும் கடவுளின்

திருவருளைக் கண்டு சேவை செய்வான். இதுவே கூட்டுற
வின் தத்துவமாகும். தான் தவிர வேறெவரு மிலர் எனும்
சுயநலத்தை நீக்கி, தான் மற்றெல்லோருக்கும் உழைக்
கவும், தனக்கு மற்றெல்லோரும் உழைக்கவும் என்னும்
அழியா நியாயமே இவ்வியக்கத்தின் கொள்கையாகும்.
(All for one and one for all) கடவுள் அவரவர் செய்
கைக் கேற்ற பலனை அளிக்கும் பரம நியாயாதிபதி. அம்
முறையை மீறி, அதிகம் பெறவேண்டி நாம் செய்யும்
கலைகள் அனைத்தும், அவரால் தண்டிக்கப்படுங் குற்றங்
களேயாகும். கூட்டுறவானது ஒவ்வொருவருக்கும் அவர
வரிட கஷ்டத்திற் கேற்ற ஊதியம் கிடைக்கும் படியும்,
இடையி லுள்ளோர் அக்கிரமமாய்ப் பேதைகளினிட கஷ்ட
சம்பாதனைகளை அபகரிப்பதைத் தடுப்பதும்; ஒவ்வொரு
வரிட செல்வ நிலையை விர்த்தி செய்வதற்குமான, மனிதர்
களின் சேர்க்கையே யாகும். பண்டை நாளில், தர்ம
சாஸ்திரங்களுக் கிணங்கி நடந்தக்கால், இவ்வியக்கத்தின்
கொள்கைகள் ஒவ்வொருவர்க்கும் சதாசாரத்தி லிருந்
தமையின், தனி ஸங்கங்களுக்கு ஏது வில்லை. தற்போதோ,
நம்மாசார விதிகளி லுள்ள ஒவ்வொரு ஸன் மார்க்கத்
திற்கும் தனித்தனி ஸங்க மூலமாய்ப் பிரசாரம் வேண்டி
யிருப்பதே, நம்மாசாரங்கள் எந்நிலைமை அடைந்தன
எனக் காட்டுகிறது. மதுபான விலக்குச் சங்கம், ஸமரஸ
சங்கம், சுகாதார சங்கம், எனப் பலவித நூதன சேர்க்
கைகள், தற்காலம் அத்தியாவசியமாயும், அவைகள்
மூலமாய்ப் பிரசாரங்கள் நற்பலனை யளித்து வருவதையும்
காண்கிறோம். அங்ஙனமே, கூட்டுறவானது மனித
வாழ்க்கைக் கின்றியமையாததான செல்வ நிலையைப் பண்
படுத்துவதாதலின், மற்றெல்லா ஸன்மார்க்க சாதகங்
களுக்கும் அஸ்திவாரமாயும், தேசத்தின் செல்வநிலைக்கு
ஆதாரமாயு மிருப்பதை யுணர்ந்து, அரசாங்கத்தாரே
1904-ம் வருஷம் சட்ட பூர்வமாய் இவ்வியக்கத்தைத்
துவக்கினார்கள். இவ்வித பரோபகாரம், சிக்கனம்,
ஸன்மார்க்கம், சுய உதவி முதலியவற்றைச் சுருதியாய்க்
கொண்ட இந்நல்லியக்கத்திற்கு, ஜாதிபேதம், மதபேதம்,
தொழில் பேதம், பெரியோர் சிறியோர், தனவந்தர்
தாரித்திரர் எனும் தாரதம்மியங்க ளில்லை. இம்மகாசக்தியை
நம்பிரதேசத்தில் பரவச்செய்து, இச்சமயத்தில் அன்பும்
ஆசரணையும் ஸ்தாபிக்க அரசாங்கத்தார் முதன் முதல்
நியமித்த சமயாசாரியர்களான, ஸர். பி. ராஜகோபாலா
சாரியார், ஸ்ரீமான் திவான் பஹதூர் R. ராமச்சந்திராவ்,



எல், டி. சாமிக்கண்ணுப்பிள்ளை, மேஸ்தர் ஹெமிங்வே,
ராவ்பகதூர் A. வேதாசலய்யர், இவர்கள், கூட்டுறவே
தம் மதமாகவும் அதின் அபிவிர்த்தியே தம் வாழ்நாளின்
நற்பலனையும் கருதி, சதா தம் மனத்தை அதிற் செலுத்தி,
நம் பிரதேசத்தின் பல பாகங்களிலும் பரவச்
செய்ததோடு, சாமான்ய குடிகளையும் கூட்டுறவின் உயர்
தத்துவங்களில் ஈடுபெறச் செய்து, தியாக புத்தியைப்
போதித்து, பல கூட்டுறவுப் போதகர்களையும் தம்
சிஷ்யர்களாக்கி, கூட்டுறவு சமயத்துக்கு ஆங்காங்கு
சங்கங்களாகிய மடாலயங்களை ஸ்தாபித்துப் பிரசாரம்
செய்து, நம் நாடெங்கும் இத்திவ்ய ஒளியைப் பரவச்
செய்தனர். பொதுஜன வாழ்க்கையில் நிதர்ஸனமாய்
தேசத்தின் தரித்திர நிலைக்குக் காரணமாயிருந்த கடன்
பளுவைக் குறைக்கவும், மிக்க அபூர்வமாய்ச் சிலரால்
மாத்திரம் காக்கப்பட்டுத் தங்கள் நன்மைக்கே ஏவப்பட
பட்ட திரவிய நிலையை யாரும் எளிதி லடையும்படியும்,
இவ்வியக்கம் துவக்கப்பட்டது. கிராமத்தார்களுக்குப்
போதிய திரவியத்தை இவ்வியக்கத்தில் தரவேண்டி,
ஸ்ரீமான் V. C. தேசிகாசாரியார், தம் நன் முயற்சியால்,
தனவந்தர்களிட சேமிப்பு அனைத்தையும் ஒன்றுசேர்த்து,
இவ்வியக்கத்துக்குச் சோர்வில்லாத திரவிய சகாயம்
செய்ய, மதராஸ் ஸெண்ட்ரல் அர்பன் பாங்கியையும்
ஸ்தாபித்து உதவினர். நம் தேசத்தில், படிப்பின்மையும்
தன் முயற்சி யின்மையும் பரவி யிருந்தமையினால் அரசாங்
கத்தாரே, பொதுச்செலவில், இவ்வியக்கத்தைத் துவக்கி
ஆதரித்துவர நேர்ந்ததாயினும், பின்னாளில், கூட்டுறவுக்
காரர்களிடமே ஒப்படைக்கும் பிரயத்தனத்தில் தீவிரமா
யிருந்தார்கள் எனச் சொல்லுவதிற் கில்லை. ஆதலின்
இவ்வியக்கம் துவங்கி ஏறக்குறைய இருபதாண்டு
சென்றும், ஆங்காங்கு ஜில்லா பாங்கிகளும் யூனியன்
களும், கடன் விவசாயம் கைத்தொழில் வியாபாரம்
முதலிய பலதுறைகளிலும் கூட்டுறவு ஆசாரம் பரவி
வந்து கொண்டிருந்தும், ராஜாங்கத்தாரின் நேர்பார்வை
யும், அதற்காக வரிசெலுத்து வோருக் கிடும் பளுவும்,
தினே தினே குறைவின்றி வருவது, விசனிக்கத் தக்கது.
மற்றைய மாகாணங்களை விட நம்பிரதேசத்தில் கூட்
டுறவில் குறுகிய பார்வை இருப்பது, சமயாசிரியர்களாய்
நியமிக்கப் படுவோரின் பாகுபாட்டைப் பொறுத்தே
யாகும். நல்லாசிரியனைத் தெரிந்தெடுத்தல் எளிதல்ல.
எச்சமயமும் முன் நோக்கிடுதலும் மேன்மை அடை

தலும் ஆசிரியனின் அமைப்பைப் பொறுத்ததேயாகும். ஆயினும், இக்கூட்டுறவு மகாசக்தியானது ஆசிரியனையும் தன் வயமாக்கும் பரம சக்தியுடையதாதலின், சத்தியத்தை நிலைநாட்டி, நம்தேசச் செல்வநிலை, மனோநிலை, வாழ்வுநிலை இவைகளைப்பெருக்கி, உலகவாழ்வைப் பண்படுத்து மென்பதற்கு ஐயமில்லை. படித்தோரும், தனவந்தர்களும், பாமரர்களும் இச்சமயத்தில் மெய்யன்பு கொண்டு, இவ்வியக்கத்தின் கொள்கைகளைத் தாம் அனுசரிப்பதுடன், பேதையோர்க்கும் புகட்டி, ஜாதீய உணர்ச்சியையும் க்ஷேமத்தையும் அபிவிர்த்தி செய்து, பரோபகாரப் பெரும்பலனை யடைவார்களாக. சுபம்.

## இந்தியத் தாய்க்கு முறையீடு

இராகம்—நாதநாமகிரியை. தாளம்—ஆதி.

மெட்டு—" நினைப்ப தெப்போது நெஞ்சே......"

பல்லவி

அடைவதெந் நாளோ—அம்மே!
சுயராஜ்யத்தை.........

சரணங்கள்

(1) ஜாதி மதபேதங்கள் ஒதி உணர்வழிந்து
வாதுகள் மிகுந்தின்னும் வேதனை புரிந்தால்——அடை.

(2) போன புகழை நினைந் தானவை செயல் ஒழிந்
தீன மதியினராய் ஊனுயிர் சுமந்தால்————அடை.

(3) அன்னியர் அடி பணிந் தின்னும் ஒற்றுமை இன்றித்
தன்னயம் கருதியே இன்னல்கள் புரிந்தால்———அடை.

## சுதந்தர தாகம்

இராகம்—காம்போதி. தாளம்—ரூபகம்.

மெட்டு—" வரதே! உன்னைப் போலுண்டோ......"

பல்லவி

வாட்டுதே, சுதந்தர நீர் அருந்திடப் பெருந்தாகம்
வாட்டுதே!

சரணம்

அல்லும் பகலும் என்னைக் கொல்லும் கொடுந்தாகம்,
அன்பர் மனைவி மக்கள் அகற்றுரெண்ணுக் கடுந்தாகம்,
வல்லார் பிற நாட்டாரைக் காணவும் கிளர் தாகம்,
வயதேற ஏற மேலும் மேலும் வளரும் தாகம்——வாட்டுதே.

—அமுதகவி

## மனச்சாக்ஷி நிபந்தனை

ஸ்ரீ. S. ஸத்தியமூர்த்தி ஐயர், B. A. B. L., M. L. C, சென்னை.

உலகில் நாகரீகமடைந்த தேசங்களில் எல்லாம், பள்ளிக்கூடங்களில் மதப்படிப்பாவது தெய்வ பிரார்த்தனையாவது நடக்கும் பொழுது, அந்தப் படிப்பை படிப்பதற்காவது, அந்த தெய்வ பிரார்த்தனையில் சேர்ந்து கொள்ளவாவது, வயதுவந்த எந்தப் பையனுக்கோ, போஷகனுக்கோ, மனச்சாக்ஷியை ஒட்டி ஆக்ஷேபணை யிருந்தால், அவர்களை அந்தப் படிப்பி லாவது, பிரார்த்தனையி லாவது சேரும்படி கட்டாயப் படுத்தக் கூடாது என்பது, வழக்க



ஸ்ரீ. S. ஸத்யமூர்த்தி ஐயர், B.A.B.L., M.L.C.

தலும் ஆசிரியனின் அமைப்பைப் பொறுத்ததேயாகும். ஆயினும், இக்கூட்டுறவு மகாசக்தியானது ஆசிரியனையும் தன் வயமாக்கும் பரம சக்தியுடையதாதலின், சத்தியத்தை நிலைநாட்டி, நம்தேசச் செல்வநிலை, மனோநிலை, வாழ்வுநிலை இவைகளைப்பெருக்கி, உலகவாழ்வைப் பண்படுத்து மென்பதற்கு ஐயமில்லை. படித்தோரும், தனவந்தர்களும், பாமரர்களும் இச்சமயத்தில் மெய்யன்பு கொண்டு, இவ்வியக்கத்தின் கொள்கைகளைத் தாம் அனுசரிப்பதுடன், பேதையோர்க்கும் புகட்டி, ஜாதீய உணர்ச்சியையும் க்ஷேமத்தையும் அபிவிர்த்தி செய்து, பரோபகாரப் பெரும் பலனை யடைவார்களாக. சுபம்.

## இந்தியத் தாய்க்கு முறையீடு

இராகம்—நாதநாமகிரியை. தாளம்—ஆதி.

மெட்டு—"நினைப்ப தெப்போது நெஞ்சே......"

பல்லவி

அடைவதெந் நாளோ—அம்மே!
சுயராஜ்யத்தை.........

சரணங்கள்

(1) ஜாதி மதபேதங்கள் ஓதி உணர்வழிந்து
வாதுகள் மிகுந்தின்னும் வேதனை புரிந்தால்——அடை.

(2) போன புகழை நினைந் தானவை செயல் ஒழிந்
தீன மதியினராய் ஊனுயிர் சுமந்தால்——அடை.

(3) அன்னியர் அடி பணிந் தின்னும் ஒற்றுமை இன்றித்
தன்னயம் கருதியே இன்னல்கள் புரிந்தால்——அடை.

## சுதந்தர தாகம்

இராகம்—காம்போதி. தாளம்—ரூபகம்.

மெட்டு—"வரதே! உன்னைப் போலுண்டோ......"

பல்லவி

வாட்டுதே, சுதந்தர நீர் அருந்திடப் பெருந்தாகம்
வாட்டுதே!

சரணம்

அல்லும் பகலும் என்னைக் கொல்லும் கொடுந்தாகம்,
அன்பர் மனைவி மக்கள் அகற்றொண்ணுக் கடுந்தாகம்,
வல்லார் பிற நாட்டாரைக் காணவும் கிளர் தாகம்,
வயதேற ஏற மேலும் மேலும் வளரும் தாகம்——வாட்டுதே.

—அழதகவி

## மனச்சாக்ஷி நிபந்தனை

ஸ்ரீ. S. ஸத்தியமூர்த்தி ஐயர், B. A. B. L., M. L. C, சென்னை.

உலகில் நாகரீகமடைந்த தேசங்களில் எல்லாம், பள்ளிக்கூடங்களில் மதப்படிப்பாவது தெய்வ பிரார்த்தனையாவது நடக்கும் பொழுது, அந்தப் படிப்பை படிப்பதற்காவது, அந்த தெய்வ பிரார்த்தனையில் சேர்ந்து கொள்ளவாவது, வயதுவந்த எந்தப் பையனுக்கோ, போஷகனுக்கோ, மனச்சாக்ஷியை ஒட்டி ஆக்ஷேபனை யிருந்தால், அவர்களை அந்தப் படிப்பி லாவது, பிரார்த்தனையி லாவது சேரும்படி கட்டாயப் படுத்தக் கூடாது என்பது, வழக்க



ஸ்ரீ. S. ஸத்யமூர்த்தி ஐயர், B.A.B.L., M.L.C.

மாயிருந்து வருகின்றது. இந்த விதியை இதர தேசங்
களில் போதனாமுறைச் சட்டத்தில் அமைத் திருக்கிறார்
கள். இதற்குத்தான் மனச்சாட்சி நிபந்தனை என்று
பெயர். இது நம் நாட்டுப் போதனா முறைச் சட்டத்திலும்
ஏற்படவேண்டுமென்று, வெகு நாளாகக் கிளர்ச்சியுண்டு.

இம்மாதிரி ஒரு நிபந்தனை இயற்ற வேண்டுமென்று
சொன்னால், அதற்குப் பல தப்பு அர்த்தங்கள் செய்கிறார்
கள். இதின் உண்மையான கருத்து என்ன வென்றால்,
பொது ஜன ஆதரவைப் பணமூலமாகவேனும் வேறு எந்த
வழியாலேனும் பெற்றிருக்கும் பள்ளிக் கூடங்களில், எந்த
மதத்தையும் பிள்ளைகள் படிக்கும்படி கட்டாயப் படுத்தக்
கூடாது என்பதுதான். இவ்விஷயத்தில் சிரத்தை எடுத்
துக் கொள்ளுகிறவர்கள், நம் நாட்டில் கிருஸ்துவ பாதிரி
யார்கள் படிப்பின் முன்னேற்றத்திற்காகச் செய்திருக்கும்
வேலையைக் குறை கூறுகிறவர்களல்ல. அவர்களிடத்தில்
நன்றி பாராட்டாதவர்களுமல்ல. நன்றி செலுத்தும் வழி,
உள் ஒன்று வைத்து புறம் ஒன்று பேசுவது சரியல்ல
என்று நம்புகின்றவர்களே.

இரண்டாவதாக, இக்கிளர்ச்சியில் சேர்ந்தவர்கள்,
பொதுவாக மதப் படிப்பினைக்கு விரோதிகளல்ல. என்
னைப் பற்றின மட்டில், நான், ஸ்வாமி விவேகானந்தர்
சொல்லியபடி, பள்ளிக் கூடங்களில் மதத்தைச் சொல்லிக்
கொடுக்க முடியாது என்று நம்புகிறவன். ஆயினும், என்
சிநேகிதர்கள் பலர், மனச்சாட்சி நிபந்தனையின் அவசியத்
தை ஒப்புக் கொள்ளுகின்றவர்கள், மதப் படிப்பு அவசியம்
என்று நம்புகிறார்கள். ஆனால், அவர்களும் நானும்
சொல்லுவது என்ன வென்றால், ‘கட்டாயமாய், மனச்
சாக்ஷிக்கு விரோதமாய், மதத்தைக் கற்கும்படி எவரையும்
வற்புறுத்தக் கூடாது; இது பிறர் மதத்தைப் பற்றி மாத்
திரமல்ல; ஒருவன் கிருஸ்தவனா யிருந்தபோதிலும் அவன்
மனச்சாக்ஷிக்கு விரோதமாகக் கிருஸ்துவ மதத்தைக்
கூடப் படிக்கும்படி கட்டாயப் படுத்துவது சரியல்ல’
என்பது தான்.

மூன்றாவதாக, அம்மாதிரி மதப் படிப்பு பள்ளிக்
கூடங்களில் ஏற்பட்டிருந்தால், எந்த மதத்தாரா யிருந்த
போதிலும், மணாக்கருக் காவது அவர்களுடைய தகப்பன்
மாருக்காவது, போஷகருக்காவது மனச்சாக்ஷியைப் பற்
றிய ஆக்ஷேபணைகள் இல்லாமலிருந்தால், அவர்கள் தாராள
மாய் அப்படிப்பைப் படிக்கலாம். இந்த நிபந்தனை அவசி
யம் வேண்டுமென்று கருதுகிறவர்கள், அம்மாதிரிப்
படிக்க கூடாதென்று கிளர்ச்சிச் செய்யப் போவதில்லை.



தாங்கள் கட்டாயப்படுத்தப் படவில்லையென்று அறிந்தும்,
மாணாக்கர் இந்தப் படிப்பைப் படித்தால், அதில் எவருக்
கும் ஆக்ஷேபணையில்லை. ஆதலால், கிருஸ்துவ பாதிரிகள்
செய்யும் வித்தியாபிவிருத்தி வேலையில் நம்பிக்கை யுள்ள
வர்களும்; மதப்படிப்பு அவசியமென்று நம்புகின்றவர்
களும்; இதர மதமா யிருந்த போதிலும், நாமும் நம்
குழந்தைகளும் அதைப் படிப்பதில் எவ்வித ஆக்ஷேபணை
இல்லை யென்று நம்புகிறவர்களும், இந்த மனச்சாக்ஷி நிபந்
தனையை எதிர்த்துச் சொல்லக் கூடிய சரியான வாதம்
எதுவு மில்லை.

இதுவுமன்றி, நான் மேலே சொல்லி யிருக்கிறபடி,
நம் நாட்டைத் தவிர, நாகரீகமடைந்த இதர நாடுகளி
லெல்லாம், இம்மாதிரி ஒரு நிபந்தனை அமுலிலிருந்து
வருகிறது. நம் நாட்டிலும் கூட, ஐரோப்பியப் பள்ளிக்
கூடங்களில், அவர்களெல்லாரும் கிருஸ்துவ மதஸ்தர்களா
யிருந்தபோதிலும், இந்த நிபந்தனை அமுலிலிருந்து வரு
கின்றது. கிருஸ்துவ பள்ளிக்கூடங்களிலும் (Catholic)
கதோலிக் பள்ளிகளிலே கட்டாய மதப்படிப்பாவது
பிரார்த்தனையாவது கிடையாது.

மதத்தில் உண்மையான நம்பிக்கையுள்ள எவரும்,
மதபடிப்பைக் கட்டாயமாய்ச் சொல்லிக் கொடுக்க வேண்டு
மென்பதை ஒப்புக்கொள்ள முடியாது. ஒருவனுக்கு
ஒரு மதத்தில் சிரத்தையாவது நம்பிக்கையாவது ஏற்பட
வேண்டுமென்றால், அவன் மனத்தை உண்மையாக மாற்ற
வேண்டும்; அம்மாதிரி மாற்றுவது கட்டாயத்தினால்
முடியாது என்பது அனுபவசித்தம். முக்கியமாய், தெய்வ
பிரார்த்தனை காலங்களில், கிருஸ்துவர்களோடு சேர்ந்து,
கிருஸ்துவர்கள் அல்லாதவர்களும் தங்கள் மனச்சாக்ஷிக்கு
விரோதமாகக் கிருஸ்துவர்கள் மாதிரி ஈசுவரனைத்
தொழுவ தென்பது அஸாத்யமான காரியம். தொழுவது
போல் பாவிப்பதோ, தன் மதிப்பிற்கும் கௌரவத்திற்கும்
குறைவாகும்.

படிப்பின் உண்மையான நோக்கம் என்னவென்று
நாம் சற்று நிதானித்து யோசிப்போமானால், இது நல்லது
இது கெட்டது என்று பகுத்தறியும் சக்தியையும்,
நல்லதைப் பின்பற்றி நடக்கும் தைரியத்தையும், கெட்ட
தைப் பின்பற்றாம லிருக்க வேண்டிய தன் அடக்கத்தையும்
உண்டாக்குவது தான் என்பது, நன்றாய் விளங்கும்.
அப்படியிருக்க, எல்லாவற்றிலும் முக்கியமான மத விஷ
யத்தில், நம் குழந்தைகளை நாம் கட்டாயப் படுத்தினால்,

அவர்கள் படிப்பினால் உண்டாகக்கூடிய உண்மையான
பலன்களை அடைய மாட்டார்களென்பதைச் சொல்லவேண்
டாம். ஆனால், இந்த ஆக்ஷேபணைகளுக்கு ஸமாதானம்
சொல்ல முடியாதவர்கள், குதர்க்க வாதம் செய்ய ஆரம்
பிக்கிறார்கள். இந்த நிபந்தனை அமுலுக்கு வந்தால், பாதிரி
யார்கள் தங்கள் பள்ளிக்கூடங்களை அடைத்து விடுவார்க
ளென்று நம்மைப் பய முறுத்துகிறார்கள். இது வீண் பய
மே. கதோலிக் கிருஸ்துவர்கள் ஏராளமாயப் பணத்தைச்
செலவழித்துப் பள்ளிக்கூடங்களை நடத்தி வருகின்றார்கள்.
அந்த பள்ளிக்கூடங்களில், கட்டாய மதப்படிப்புக் கிடை
யாது. அவர்கள தங்கள் பள்ளிக்கூடங்களை மூடப்
போவதில்லை. மற்ற கிருஸ்துவர்களும் மூடுவார்களென்று
நான் நம்ப வில்லை. அப்படியே அவர்கள் செய்வார்
களென்று வைத்துக் கொண்ட போதிலும், ஏதோ சில
பள்ளிக்கூடங்கள் மூடப்படு மென்ற பயத்திற்காக, நம்
முடைய மனச்சாக்ஷிக்கு நாம் இடம் கொடுக்கக் கூடா
தென்பது சரியான வாதமாகாது.

ஒருமதத்தையும் படிக்காம விருப்பதினும் கிருஸ்துவ
மதத்தைக் கட்டாயமாய்ப் படிப்பது சிலாக்கிய மென்று
சொல்லுகிறவர்கள், தங்கள் மதத்தில் நம்பிக்கையில்லாத
வர்களும், கிருஸ்துவ மதத்தில் கௌரவ மில்லாதவர்
களும், படிப்பின் உண்மையான நோக்கத்தை அறியாத
வர்களுமா யிருப்பதால், அவர்களுக்கு நான் பதில்
சொல்லக் கடமைப் பட்டவனில்லை.

சமீபத்தில் சென்னைச் சர்வ கலாசாலை நிர்வாக
சபையில் இதைப்பற்றி விவாதம் நடந்தபொழுது, இன்
னொரு புதிதான ஆக்ஷேபணை சொல்லப்பட்டது. சட்ட
சபையில் தான் இதைப் பற்றி விவாதம் செய்ய வேண்டுமே
ஒழிய, சர்வ கலாசாலையில் செய்யக் கூடா தென்றனர்.
அது சரியான வாத மல்ல. எந்த ஒரு மதத்தையும்
பரவச் செய்வதற்காகப் பொதுப் பணத்தை உபயோகப்
படுத்தக் கூடா தென்கிற வாதம் ஒரு புறமிருக்க, அம்
மாதிரி கட்டாய மதப்படிப்பு நடந்து வந்தால் படிப்பின்
உண்மையான நோக்கத்திற்கு ஹானி ஏற்படு மென்பது
தான் உண்மையான ஆக்ஷேபணை. அதை மகா ஜனங்கள்
நன்கு அறிந்து, இவ்விஷயத்தில் தீவிரமான கிளர்ச்சி
செய்து, நம் நாட்டிலும், இதர நாகரீகமடைந்த நாடுகளைப்
போல், கட்டாய மதப்படிப்பாவது பிரார்த்தனையாவது
பள்ளிக்கூடங்களில் நடக்காமல் செய்யவேண்டும்.



## ஸ்ரீ ராமகிருஷ்ண மாணவரில்லம்
### மயிலாப்பூர்

"எவ்வுயிரும் என்னுயிர் போல் எண்ணி யிரங்கவும் நின்
தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே"

——தாயுமானவர்.

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸ தேவரின்
சிஷ்யரான ஸ்ரீமத் விவேகானந்த ஸ்வாமிகள் தம் குரு
நாதர் பேரால் மடாலயங்களை ஏற்படுத்துங் காலத்தில்,
அம்மடங்களைச் சேர்ந்தோர் கைக்கொள்ள வேண்டிய
லட்சியங்களைப் பற்றிப் பின்வருமாறு கூறி யுள்ளார்.
முதன்மையாக அன்னதானம் செய்யவேண்டும்—அதாவது,
அன்னமும் வஸ்திரமும் வாழ்க்கைக்கு இன்றியமையாத
மற்றப் பொருள்களும் கொடுத்து உதவுவதாம். அடுத்தபடி
வித்யாதானம்—அதாவது, பல விஷயங்களைப் பற்றிய
அறிவைப் புகட்டி, மனோ விருத்தியை ஒழுங்கு படுத்து
வதாம். கடைசியாக, ஞானதானம்—அதாவது, ஆத்ம



ஸ்ரீ ராம்கிருஷ்ண பரமஹம்ஸர்



ஸ்வாமி விவேகாநந்தர்

வித்யா உபதேசம். இம்மூன்று விதமான ஸேவையையும் ஒருமைப் படுத்திச் சீராக நடத்தி வருவதே இம்மடங்களின் பிரதான கைங்கரியமா யிருக்க வேண்டும். இந்த மார்க்கத்தைப் பின் பற்றுவதே ஸ்ரீ ராமகிருஷ்ண மாணவரில்லத்தின் முன்னோக்கமாம், அதன் சரித்திரத்தையும், அங்கு எவ்வாறு கல்வி போதிக்கப் படுகிறதென்பதைப் பற்றியும் சுருக்கிக் கூறுவோம்.

சென்னை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்திற்கு முதல் தலைவராயிருந்த ஸ்ரீமத் ராமகிருஷ்ணானந்த ஸ்வாமிகள், நம் நாட்டுச் சிறுவர் பலர் வறுமையினால் உணவிற்கும் படிப்பிற்கும் வழியற்று, பணம் படைத்த பிரபுக்கள் பெருத்துள்ள இந்த



ராஜதானி நகரத்தில், தெருத் தெருவாகத் திரிந்து திண்டாடுவதைக் கண்டு மனம் சகியாதவராய், இக்கஷ்டத்தை ஒருவாறு குறைக்கத் திருவுளங் கொண்டு, இவ்வில்லத்தை 1905ம் ௵ பிப்ரவரி ௴ (குரோதி ௵ மாசி ௴) ஸ்தாபனம் செய்தார். மிக்க பரிதாப நிலையிலிருந்த ஏழு மாணவர்களைச் சேர்த்துக் கொண்டு, அவர்கள் வாசம் செய்யக் குடக்கூலிக் கொரு வீடும், அவர்களுக்கு அன்னவஸ்திரமும், படிப்பதற்கு வேண்டிய வசதிகளும் ஏற்பாடு செய்தார். அவரை அண்டி நற்குண நற்செய்கைகளில் ஈடுபட்டிருந்த சில வாலிபர்கள், பலரை யணுகி இவ்வில்லத்துக்காக ஆரம்பத்தில் சுமார் நானூறு ரூபாய் வருஷந் தோறும் வருவாய் கிடைக்கும்படி செய்தனர். எம்பெருமான் திருவருளை முன்னிட்டுச் செய்யப்பட்ட இச்சிறு முயற்சி பெரிய பயனைக் கொடுப்பதாய், வளர் மதிபோல் நாளுக்கு நாள் விருத்தியடைந்து, இப்பொழுது நூற்றுக்கு மேற்பட்ட மாணவர்களுக்கு உதவி புரியுந் திறமை யுடையதாய்ச் சிறப்புற்று விளங்குகின்றது.

மாணவர்கள் இருக்கைக்கென ஏற்பட்டுள்ள மற்ற விடுதிகளுக்கும் இவ்வில்லத்திற்கும் வேறுபாடு என்ன? மற்றவை விடுதிகளாம்; இது அவர்கள் சொந்த வீடுபோல் பாவிக்கும் இல்லமாம். மற்ற இடங்கள் பணங்கொடுப்பதற்குத் தகுந்தபடி உணவு, படிக்க வசதி முதலிய சௌகரியங்களைக் கொடுப்பவை. இவ்வில்லமோ பெற்றோர் பிள்ளைகளைப் பரிபாலிப்பதுபோல், "நன்றியொருவருக்குச் செய்தக்கா லந்நன்றி என்று தருங்கொ லென வேண்டா" என்றபடி, எல்லா நன்மைகளையும் பிரதி பிரயோஜனத்தை எதிர் பாராமல், அன்பின் மிகுதியால் செய்வதாம். மாணவர்கள் இல்லத்தைச் சேர்ந்தது முதற்கொண்டு, நன்னெறியைக் கைக்கொண்ட நல்லோர் வாழும் வீட்டில் வளரும் குழந்தைகளைப் போல், எம்பெருமானிடம் அன்பு, பெரியோரிடம் பணிவு, சிறியோரிடம் ஆதரவு, சாந்தம், உண்மை, உழைப்பு, உற்சாகம் முதலிய நற்குணங்களில் பயின்று, தீய ஒழுக்கங்களை விலக்கி, நல்வாழ்க்கையில் நாட்ட முடையவ ராகின்றனர்.

இவ்வில்லம் ஆரம்பமானபின் பன்னிரண்டு வருஷகாலம் தனக்கென ஒரு சொந்த வர்சஸ்தான மில்லாததாய், பல இடங்களில் குடிக்கூலிக்குக் கிடைத்த வீடுகளிலேயே நடைபெற்று வந்தது பெருங் கொடுமையாய் இருந்தது. இங்கு நடந்துவரும் தர்மத்தின் சிறப்பைக் கண் கூடாகக் கண்டுவந்த பல நண்பர்கள், கூடிய சீக்கிரத்தில் ஒரு

கட்டிடம் நிர்மாணம் செய்ய வேண்டுமென வற்புறுத்திக் கூறினர். இதற்கு வேண்டிய முயற்சி செய்ய ஆரம்பிக்கையில், காலஞ்சென்ற திவான் பஹதூர் சருக்கை கோபாலாசாரியாரின் மூத்தகுமாரரான ஸ்ரீமான் ஸ்ரீநிவாஸாசாரியார், மிகுந்த அன்புடன் முன்வந்து, பதினைந்து மனை விஸ்தீரண முள்ள நிலத்தைக் கொடுத்துதவினர். கவர்ன்மெண்டாரும் கட்டிடச் செலவில் பாதியைக் கொடுப்பதாய் ஒப்புக் கொண்டார்கள். இதை ஆதி தொட்டு ஆதரித்து வந்த பல கனதனவான்களும் தாராளமாய்ப் பொருளுதவி செய்தனர். எல்லாவற்றுலும் சுமார் $2\frac{1}{2}$ லட்சம் ரூபாயில், அழகும் அமைப்பும் வாய்ந்த முக்கிய கட்டிடமும், அதற்கேற்ற சுற்றுக் கட்டிடங்களும், 1921-ம் வரு கட்டிமுடிக்கப்பட்டன. (இன்னும் வரும்)





# கெனியாவில் இந்தியர்

ஸ்ரீ. சி. ஆர். நாயுடு, சென்னை

கெனியா நாட்டுக்குக் குடியேறிச் சென்றுள்ள இந்தியரின் தற்கால நிலைமையும், அவர்கள் தங்கள் பிறப்புரிமைகளைப் பாது காக்கும் பொருட்டுச், சாந்த வழிகளிலே நடாத்தி வரும் உரிமைப் போரின் நேர்மையும், உலக மறிந்த விஷய மாகும். இது காலை இவ்விஷயம் இந்தியாவின் மானத்தையே பாதிக்கும் ஓர் நெருக்கடியான நிலைக்கு வந்து விட்டிருக்கின்றது. பிரிட்டிஷ் அரசாங்கத்தார் இந்தியாவுக்குச் செய்து கொடுத்திருக்கும் வாக்குத் தத்தங்களைப் பரீக்ஷிப்பதற்கு, இக் கெனியா விஷயம் ஓர் உரை கல் போலிருக்கிற தென்று, சர்வ கட்சி இந்திய இராஜ தந்திரிகளும் ஒருங்கே கூறுகின்றனர். எனவே, கெனியா இந்தியரின் முற்கால தற்கால நிலைமைகளைப் பற்றித் தமிழ் நாட்டார் உணரும் பொருட்டு, பஞ்சாமிர்தம் ஆசிரியரின் வேண்டுகோளுக் கிணங்க இக்கட்டுரையை எழுதலாயினேன்.



ஆரம்ப காலம்—பதினைந்தாம் நூற்றுண்டிலேயே இந்திய மக்கள் ஆப்பிரிக்காவின் கிழக்குப் பாகங்களுக்குச் சென்று வணிகம் நடத்தி வந்தனர்; இது தேச சரித்திரம் கண்ட உண்மை. அப்போது பிரிட்டிஷ் கீழ் ஆப்பிரிக்கா கம்பெனி ஸ்தாபிக்கப்பட வில்லை. அந்தப் பிரதேசத்துக்கு கெனியா என்றும் பெயர் கொடுக்கப் படவில்லை. பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியாவில் ஸ்தாபிக்கப் படவுமில்லை. அப்படி யிருக்கையில், இந்திய மக்கள், கீழ் ஆப்பிரிக்காவின் காட்டுப் பிரதேசங்களிலே வழி வகுத்துச் சென்று, ஆப்பிரிக்கா ஊர்களில் வியாபார ஸ்தலங்களை ஸ்தாபித்தனர். அதன் பின்னர் தான், அங்கே போக்கு வரவு வசதிகள் அதிகரித்த தென்னலாம். இவ்விதமாக அந்நாட்டிலே நாகரீகம் பாம்புவதற்கு அடி கோலியவர், இந்திய மக்களே யாவர். இவ்விஷயமாக ஸ்ரீமான் சர்ச்சில் என்பவர், தாம் எழுதிய "எனது ஆப்பிரிக்கா யாத்திரை" என்னும் புத்தகத்திலே, கீழ் வருமாறு குறிப்பிடுகிறுர்:— "வெள்ளையர் போக முடியாததும், வெள்ளையர் சென்று ஏதும் தொழில் செய்து பிழைக்க முடியாததுமான பல இடங்களிலும் போய்ப் புகுந்து வியாபாரம் நடத்தியவரும், மற்றெல்லாரிலும் விசேடமாக வியாபாரத்துக்கு அடி கோலியவரும், முதன் முதலாகப் போக்கு வரவு மார்க்கங்கள் ஏற்படுத்தியவரும், இந்திய வணிக மக்கள் தான்." கெனியா நாட்டிலே இந்திய மக்களுக்கு எத்துணை உரிமை யுண்டென்பது இதனல் தெற்றெனப் புலனுகும். ஆனல் ஊரார் நிலத்துக்குப் பேயாய்ப் பறக்கும் ஐரோப்பிய புத்தி, இந்திய மக்களுக்குக் கிடையவே கிடையாது. எனவே, அங்குள்ள செழிப்பான நிலங்களைத் தங்களுக்குச் சொந்தமாக்கிக் கொண்டு, அந் நாட்டிலேயே நிலையாய்க் குடியிருக்க அவர்கள் எண்ணினரில்லை போலும். பின்னல் இவ்வித கஷ்டம் வரும் என்று, அவர்கள் அந்தக் காலத்தில் எதிர் பார்க்கவில்லை என்றே சொல்லவேண்டும்.

அப்படிச் சிலகாலம் சென்றது. அதற்குள் ஐரோப்பிய அரசுகள் நூதன சித்தாந்தம் ஒன்று கண்டு பிடித்தார்கள். என்னவெனில், 'ஆப்பிரிக்கா கண்டம் அந்தகாரத்தில் அமிழ்ந்து கிடக்கிறது; அதனை ஆளுக்கொரு கூறுக ஐரோப்பிய அரசுகள் பங்கு போட்டுக் கொண்டு, அங்குக் குடியேறச் செல்லும் ஐரோப்பியரின் சீரும் செல்வமும் பொழியுமாறு, ஆப்பிரிக்கா ஜனங்களை சொற்ப சம்பளத்துக்குக் கூலி வேலை செய்யும்படி வைத்

துக் கொண்டால் தான், ஆப்பிரிக்காவும், ஆப்பிரிக்கரும்
கதி மோட்ச மடையக் கூடும்' என்கிற சித்தாந்தம் தான்.
எந்த நாட்டையாவது கைப்பற்றிக் கொள்ள வேண்டுமா
யின், இது போன்ற ஒரு சித்தாந்தத்தை ஏற்படுத்திக்
கொள்வது ஐரோப்பிய அரசுகளின் வழக்கம். அப்
படியே, ஆப்பிரிக்கா கண்டத்தையும், பிரிட்டிஷ், பிரஞ்சு,
ஜெர்மன், போர்த்துகீஸ், பெல்ஜிய அரசுகள், தங்கள்
இஷ்டம் போலக் கூறு போட்டுக் கொண்டனர். கிழக்கு
ஆப்பிரிக்காவின் ஒரு பாகம், பிரிட்டிஷ அரசாங்கத்தின்
ஆதீனத்துக்குள் வந்தது. அந்தப் பிரதேசததில் தான்
கெனியா மாகாணம் இருக்கின்றது.

பின்னர், பிரிட்டிஷ் கிழக்கு ஆப்பிரிக்கா கம்பெனி
ஏற்பட்டு, பிரிட்டிஷார் அந் நாட்டுக்குக் குடியேறிச் சென்ற
னர். இந்தியர் ஏற்கனவே அங்கு ஏற்படுத்தி யிருந்த
போக்கு வரவு மார்க்கங்களும், வியாபார ஸ்தலங்களும்,
இந்த ஐரோப்பியருக்குப் பெரிதும் அனுகூலமா யிருந்தன.
ஐரோப்பியர் அங்கு ஸ்தாபித்த வர்த்தகத் துறைகளிலும்,
தொழிற் சாலைகளிலும், லிகிதராகவும், யந்திர வேலைக்கார
ராகவும், பிரதிநிதிகளாகவும், இந்திய மக்கள், ஐரோப்பிய
ருடன், தொடு தோளாய் நின்று வேலை நடத்தி வந்திருக்
கின்றனர். யுகாண்டா ரயில் பாதை இந்திய தொழிலாள
ராலேயே போடப்பட்டது. இவ்வாறு ஒவ்வொரு விஷ
யத்திலும் இந்திய மக்கள் ஐரோப்பியருக்கு உதவி புரிந்
துள்ளார்கள். இந்தியர் சகாய மில்லாவிட்டால், ஐரோப்
பியர் கிழக்கு ஆப்பிரிக்காவில் அவ்வளவு எளிதில் நிலை
பெற்றிருக்க முடியாது.

ஐரோப்பியர் அங்குச் சென்று குடியேறின நாள்
முதல், ஆப்பிரிக்கரின் துர்பாக்கிய காலம் ஆரம்பித்த
தென்னலாம். "ஒண்ட வந்த பிடாரி ஊர்ப் பிடாரியை
துரத்திவிட்டது" என்ற முதுமொழிக் கிணங்க, ஐரோப்
பியர் அங்குள்ள வளம் பெற்ற மேட்டு நிலங்களை யெல்லாம்
தங்களுக் கென்று எல்லை போட்டுக் கொண்டு, ஆப்பிரிக்கர்
களை யெல்லாம் பள்ளமான சதுப்பு நிலப் பிரதேசத்தில்
குடி யிருக்கும்படி ஏற்பாடு செய்தனர்.

தற்கால நிலை. இந்தியமக்களின் உதவியால் கீழ் ஆப்
பிரிக்காவில் நிலைத்து ஆப்பிரிக்கரை யெல்லாம் கீழ்ப்படுத்
தின பிறகு, இந்திய மக்களையும் அங்கிருந்து அகற்றி விட
வேண்டுமென்ற சிறுமைப் புத்தி ஐரோப்பியருக்கு உதய
மாயிற்று. இந்தியர் அங்குப் புதிதாய்க் குடியேறிச்
செல்வதை நிறுத்தவும், ஏற்கனவே வந்து நிலைத்துப்



போன இந்தியரின் வியாபாரம், தொழில் முயற்சிகளை
மட்டுப் படுத்தவும், ஐரோப்பியர் சூழ்ச்சி செய்யலாயினர்.
இந்தியர் அந்தச் சூழ்ச்சிகளை ஆட்சேபித்து, பிரிட்டிஷ்
அரசாங்கத்தாருக்கு முறையிட்டனர். அதற்குள் ஜெர்மன்
யுத்தம் ஆரம்பித்து விட்டது. அதில் இந்தியப் போர்
வீரரின் புஜபல பராக்கிரமத்தால் ஜெர்மன் கீழ் ஆப்
பிரிக்கா ஜெயிக்கப்பட்டு, பிரிட்டிஷ் ஆதினத்துக்குள்
வந்தது. யுத்தத்தில் இந்தியாவின் உதவி வேண்டி யிருந்
தமையால், இந்தியருக்குப் பிரிட்டிஷ் ராஜ்ஜியத்திலே சம
உரிமை கொடுப்பதாகப் பிரிட்டிஷ் அரசாங்கத்தார்
வாக்குக் கொடுத்தனர். ஆனால் அதன்படி கெனியாவிலே
நடக்கக் கூடாதென்று அங்குள்ள ஐரோப்பியர் பெரு
முயற்சி செய்தனர். அவர்கள் முயற்சியால், சென்ற
1917-ம் வருடத்தில், கிழக்கு ஆப்பிரிக்கா பொருளாதார
நிலையை விஜாரிக்கும்படி ஒரு கமிஷன் ஏற்படுத்தப்
பட்டது. அந்தக் கமிஷன், இந்தியர் அங்கிருப்பது ஆப்
பிரிக்கரின் முன்னேற்றத்துக்கு இடையூறா யிருக்கிற
தென்று, இந்திய மக்களுக்குப் பாதகமாக முடிவு கண்டது.
இது மிகவும் உண்மையான தீர்மானமன்றோ?

இது இந்தியருக்குப் பெரிதும் மனத் தாங்கலை விளை
வித்தது. பிறகு இந்தியாவிலும் கெனியாவிலும் எழுந்த
கிளர்ச்சியின் பயனாக, கெனியா சட்ட சபையில் நாலு
இந்தியப் பிரதிநிதிகளும், நிர்வாக சபையில் ஒரு பிரதி
நிதியும் நியமிக்கப் பட்டனர். ஆனால் இந்த ஏற்பாட்டை
ஒருவித "தற்கால சாந்தி" யாக மாத்திரம் கெனியா
இந்தியர் ஒப்புக் கொண்டனர். ஐரோப்பியருடன் சம
உரிமை, அதாவது, ஜனத் தொகைக்கு தக்கதாகப் பிரதி
நிதிகளைத் தெரிந்தனுப்பும் உரிமை, கொடுக்கப்பட வேண்
டுமென்பது தான், கெனியா இந்தியரின் வேண்டுகோள்.
ஐரோப்பியரோ, இதற்கு இணங்காமல், இங்கிலாந்திலுள்ள
தங்கள் இனத்தாரின் உதவியால், பிரிட்டிஷ் அரசாங்கத்
தைப் பயமுறுத்தி, இந்தியருக்குப் பாதகமாக முடிவு
கண்டு விட்டனர். ஒன்பதினாயிரம் ஐரோப்பியரின் பய
முறுத்தலுக்குப் பயந்து, பிரிட்டிஷ் அரசாங்கத்தார், தாங்
கள் இந்தியருக்குக் கொடுத்த வாக்குத் தத்தத்தை மீறி,
இந்தியரின் உரிமைகளுக்குப் பாதகமாகத் தீர்மானம்
செய்திருக்கிறார்கள். இதிலும் கேவலமாக எந்த அரசாங்
கத்தாரும் தங்கள் நடுவு நிலையிலிருந்து வழுவி யிருப்பார்
களென்று சொல்ல முடியாது. இனி இந்திய மக்கள்
கெனியாவுக்குப் போகாதபடி அவர்கள் ஏற்படுத்தியுள்ள

சட்டமும், இந்த தீர்மானத்தைப் போலவே மிகச் சிறுமை வாய்ந்ததா யிருக்கின்றது. ஆனால் இவ்விஷயம் இத்துடன் முற்றுப் பெறுவதல்ல. இதன் கடைசி ஆட்டம் இன்னும் ஆடித் தீரவில்லை. இதன் மேல் விளைவுகள் எத்துணை விபரீதமா யிருக்குமென்றும், அவை எவ்வாறு பிரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்தைப் பாதிப்பன என்றும் வெகு சீக்கிரத் தில் வெளிப்படும்.



## மதிப்புரை

(1) **இந்து பாக சாஸ்திரம்** :—[P. V. ஜகதீசையர் எழுதியது —திருத்திய இரண்டாம் பதிப்பு—Dr. ஸர். S. சுப்ரமணிய ஐயராலும், Dr. P. சுப்பராயனாலும் முகவுரை எழுதப் பெற்றது—விலை எட்டணா—ஆசிரியர் அச்சுப் பிரசு ராலயம்—புஸ்தகசாலை—மயிலாப்பூர்—சென்னை]. இந்த நூல் கல்வி யிலாகா அதிகாரிகளால் அங்கீகரிக்கப்பெற்றது. பெண் பள்ளிக் கூடங்களுக்கும் பிறர்க்கும் உபகாரமா யிருக்கும்—3 படங்களுள்ளது.

(2) **செல்வ விருத்தி விளக்கம்** :—[சரித்திரபோதகர் தி. சே. சுப்பிரமணிய ஐயர், M.A., L.T., இயற்றியது. படங்கள் பல அடங்கியது—விலை ஒரு ரூபாய்——ஆசிரியர் அச்சுப் பிரசுராலயம்—புஸ்தகசாலையில் கிடைக்கும்.] இவ்வாசிரியர், எழுதப் புகுந்த விஷயத்தை நன்கறிந்தவர். அதன் பல அம்சங்களையும் தெளிவாய் விளக்கி யிருக்கிறார். இந்நூல் மாணவர்க்கு மட்டுமன்றி, நமது தேசவிருத்தி வழிகளை நாடும் பலர்க்கும் உதவியாகும்.

(3) **சங்க சிந்தாமணி** :— [அகநானூற்றுப் பதிப்பாசிரியரான வே. இராஜகோபாலையங்கார் எழுதியது—'கம்பர் விலாசம்' மயிலாப்பூர். விலை 0–12–0] சங்க நூல்களால் அறிய வரும் அரசர், புலவர், பிறர் சரித்திரங்கள் ஆங்காங்கு சிதறிக் காண்பனவற்றைத் தொகுத் தெழுதி வருவதில், இந்நூல் முதற் பாகமாகும். சங்கநூல்களைப் பயில் வார்க்கும், பழைய சரித்திர ஆராய்ச்சி செய்வார்க்கும், தமிழ் மக்களின் பண்டைச் சிறப்பை அறிய விரும்புவார்க்கும் இது பயன்படும்.





# பலதுறைப் பொறுக்குமணிகள்

## பத்திரிகை ஆராய்ச்சி

### நாம் நாகரிகம் அடைந்திருக்கிறோமா?.

வெளிப்படையாக நோக்கின், இந்தக் கேள்விக்கு எல்லாரும் "ஆம்" என்றே பதி லுரைப்பார்கள். காட்டு மனிதரை விட நாம் நாகரிகம் அடைந்திருக்கின்றோம் என்பதில் சந்தேகமேயில்லை. ஆனால் நாகரிகம் அடைய நம்மால் இயன்றவாறு நாம் முயற்சி புரிந்தோம் என்று சொல்லுதல் முடியாது. நாகரிக சித்திக்கு ஏற்பட்ட அமயங்களை அநேகமாய் நாம் பயன் படுத்திக் கொள்ள வில்லை.

தற்கால நாகரிகத்திற்குச் சாக்ஷிகளாக இப்பொழு துள்ள யந்திரங்களைச் சிலர் சுட்டிக் காட்டுவர். யந்திரத் தொகுதியை விட ஜனசமூக வாழ்க்கை ஏற்பட்டிருப்பதே நாகரிகத்திற்கு நல்ல அடையாளமாம். மஹா யுத்தத்தில் நடந்தவாறு யந்திரங்களைத் தீயவழிகளில் பிரயோகித்தால் நாசமே விளையும். யுத்தம் இல்லாமற் போகும் காலத் தில் தான் உலகம் நாகரிகம் அடைந்ததாகும்.

மனிதர் சட்டதிட்டங்களைப் பொதுவில் ஒத்துக் கொள்வது அவர் நாகரிகத்திற்கு ஒரு சான்றெனினும், அது மாத்திரம் போதாது. வாழ்க்கை இன்பத்தை முற்றிலும் கெடுக்கும் அற்பமான குறைகள் மிகப்பல இன்னும் சமூகவாழ்வில் இருக்கின்றன.

நடக்கை நயம் என்பது இப்பொழுது சிறிதும் இல்லை. யாவரும் நடக்கை நயம் உள்ளவனை அலக்ஷியம் செய்கிறார் கள். கிழவி யொருத்தி இளைத்துநிற்கச், சுகமாகத் தனது ஆசனத்தில் வீற்றிருக்கும் பிரயாணியை, மரியாதை செய்கின்றனர். தெருவில் ஒருவன் கீழே விழுந்தால், அவனைச்சுற்றிலும் வேடிக்கை பார்த்துக் கூடும் கும்பல் நாகரிகக் குறைவையே காட்டும். ஓநாய்களும் நரிகளும்

அப்படிக் கூடுவது இயற்கை. மனிதன் அவ்வாறு செய்
தால், அவற்றின் ஸ்திதிக்குத் தாழ்வாகிறான். "தற்காப்பு"
என்ற இயற்கைக் குணமானது, தனிகரும் வர்த்தகரும்
எளியரை வருத்தியும் பிறர் சொத்தை அபகரித்தும்
அநியாயம் செய்வதற்கு ஒரு சாக்காய்விட்டது. நாம் இன்
னும் தாழ்வான நிலையில் இருப்பதற்குக் காரணம் யாதெ
னில், மனிதர் நாகரிகத்தின் வெளிப்படைச் சின்னங்களை
விரைவிலும், உண்மைச் சின்னமாகிய மனஉயர்வை மெது
வாகவும் அடைவதுதான். உண்மை நாகரிகத்தைப் பெற
வே நாம் எப்பொழுதும் முயலவேண்டும். —பா.

## வானசாஸ்திரக் குறிப்புக்கள்

நக்ஷத்திரங்களின் உஷ்ணநிலை:—பூமியைவிடச்
சூரியனில் உஷ்ணம் மிக அதிகம் என்பதும், சூரியனைவிட
வேறு சில கோளங்களில் சூடதிகம் என்பதும் பலர்க்குத்
தெரிந்த விஷயம். இச்சூடு எவ்வளவு அதிகம், எவ்வளவு
கொடிய தீவிரமானது என்று வான சாஸ்திரிகள் ஏற்ற
கருவிகளைக் கொண்டு கண்டுபிடித் திருப்பதை மற்றவர்
மனோபாவத்தில் எண்ணி மதிப்பிடுவதும் அசாத்தியமா
யிருக்கிறது. சூட்டை அளந்து கணக்கிடுவதில், நூற்
றெல்லை (absolute centigrade) என்னும் விகிதப்படி,
பனிக்கட்டி 273 டிகிரியில் உருகுகிறது; வெள்ளி 600,
இரும்பு 1750, பிளாடினம் 1980 டிகிரிகளில் உருகுகின்
றன; ஹைட்ரோஜன் வாயு வெளிச்சம் 2170 டிகிரியும்,
அஸடிலின் வெளிச்சம் 2680 டிகிரியும் ஆகும்; ஆருத்ரா
நக்ஷத்திரத்தின் சூடு, 2500 டிகிரியும் ஆகும்; நமது
சூரியன் 5000 டிகிரியும், துருவ நக்ஷத்திரம் 8200 டிகிரி
சூடு முள்ளவை. இவை இப்படியாக, ஆல்பா ஆண்டுரோமீடு
என்னும் நக்ஷத்திரம், 10,400 டிகிரியும், லேடாபெகாசி
என்பது 28,000 டிகிரி சூடும் உள்ளனவாம்.

ஆருத்ராநக்ஷத்திரம் (திருவாதிரை) இப்பொழுது ஒரு
வருஷகாலமாக, அதாவது போன சித்திரை மாத முதல்,
முன்னிலும் மூன்றிலொருபங்கு அதிகப் பிரகாசமாயிருக்
கிறது. இதன் காரணம் விளங்கவில்லை. நமது சூரியனுக்
கும் இந்த நக்ஷத்திரத்துக்கும் பெருமையிலுள்ள வித்தி
யாசம் அசகசாந்தரமாகும். சூரியனது குறுக்களவு
865,000 மைல் தான்; திருவாதிரையின் குறுக்களவோ
215,000,000 மைலாகும்!



## சுகாதாரக் குறிப்புக்கள்

சரக சுசுருதர்களின் பழைய ஆயுர்வேத கிரந்தங்
கள் பின்வருமாறு கூறுகின்றன:—நல்ல ஆகாரத்தைப்
போதுமான அளவே உண்டாலும், மனக்கவலை கிலேசம்
துக்கம் பயம் தத்தளிப்பு தூக்கமின்மை முதலிய தொந்
தரவுகளினால் ஜீரணம் தடைப்பட்டு, அசௌக்கிய
முண்டாகும். அதிகம் ஸ்தூலித்த உடம்பு மெலிவதற்குப்
பட்டினி யிருப்பதும், பசி பொறுக்காத போது எளிதில்
ஜீரணமாகாத உணவை உண்பதும் தக்க வழிகளாம்.
அதிக ஸ்தூலம், அதிக மெலிவு, இரண்டும் அசௌகரியந்
தான்; எனினும், மெலிவினும் ஸ்தூலமே அசௌகரியம்
மிக்கது; ஏனென்றால், ஏதாவது நோயுற்றால், ஸ்தூல சரீரி
கள் அதிகம் கஷ்டப்படுவார்கள்.

சரீரத்தில் நோயின்றி வாழுவதற்குத் திருவள்ளுவ
நாயனார் கூறும் வழி மிகச் சிறந்ததாம். என்னவெனில்:—

"அற்றால் அளவறிந்து உண்க, அஃது உடம்பு
பெற்றான் நெடிது உய்க்குமாறு" என்பதே. "அற்றால்"
என்னும் நிபந்தனையைக் கவனியாது, முன் உண்ட உணவு
முற்றிலும் ஜீரணமாகி அற்றுப் போகுமுன் மீண்டும்
உண்பதுதான், பல நோய்களுக்கு மூலம். "அளவறிந்து"
என்னும் நிபந்தனையும், முக்கியமே. உண்மையில் பசித்த
போதும் கூட, மட்டுக்கு மிஞ்சி உண்ணலாகாது. தனக்கு
விருப்பமான சுவைமிக்க பண்டங்கள் என்றால், 'வேண்
டாம்' என்றோ, 'போதும்' என்றோ சொல்ல, சிலர்க்கு
ஒரு பொழுதும் நாவு எழாது. குன்ம ரோகி ஒருவர்,
தினந்தோறும், பகலும் இரவும், வாயார வயிறார உண்டு,
பிறகு விரல்களைவிட்டு வாந்தி பண்ணுவதை வழக்கமாக்கி
யிருந்தார். சுவை மிக்க பதார்த்தங்களில் அவருக்கு அவ்
வளவு விருப்பம்! "விரல் நுழைய இடமிருந்தால், இரண்டு
வடைகளைத் திணித்திருக்க மாட்டேனா?" என்ற மகான்,
இவருக்குத் தமையனார் போலும்.

ஆடையும் ஆரோக்கியமும்:—ஒரு தேசத்தின் சீதோஷ்ண
ஸ்திதிக்கு ஏற்ற ஆடை யுடுத்தாவிட்டால், சரீர சௌக்
கியம் கெட்டுப் போகு மென்பது தெளிவு. ஆஸாமில்
உள்ள நாகர் என்னும் சாதியாரைக் கவனித்தவர் ஒருவர்,
அவர்கள் ஐரோப்பியரைப் போல் ஆடை யுடுத்துவதால்,
வயிற்றளைச்சல், சிரங்கு, க்ஷயம் முதலிய வியாதிகளுக்கு
உள்ளாகின்றனர் என்று கூறுகிறார்.

ஆதி காலத்து நோய்கள் :—ஆயிரக் கணக்கான ஆண்டுகளாகப் பதனிட்டுப் பத்திரப் படுத்தப்பட்டு, இப்பொழுது ஈஜிப்து தேசத்தில் வெளியிலெடுக்கப் படும் சவப் பரிசோதனையி லிருந்து, வைத்திய சாஸ்திரிகள் சில விஷயங்களைக் கண்டறிகின்றனர். ஏறத் தாழ ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் புதையுண்ட ஒரு சிறுவனது பிரேதத்தைச் சோதித்ததில், 'மூத்திரப் பையில் கல்' என்னும் நோய் அவனுக்கிருந்தது என்பது தெரியவருகிறது.

## மாதர் சங்கம்

திருநெல்வேலி ஜில்லா மகாநாடு போன மாதத்தில் கோயில்பட்டியில் கூடிய பொழுது, 22-3-1924 மாலை மிகப் பெரியதோர் ஸ்திரீகள் கூட்டமும் கூடிற்று. இரண்டாயிரம் மாதர் வரை வந்திருந்தனராம். தன் கணவருடன் 'தேசாபிமானி' என்னும் பத்திரிகையை நடத்திவரும் யாழ்ப்பாணத்து ஸ்ரீமதி மங்களாம்பாள் அம்மாள் தலைமை வகித்தனர். அவர் பிரசங்கத்தில்:— இந்தியாவையும் இந்திய மாதரையும் கைதூக்கி உயர்த்துவதே சங்கத்தின் கருத்தென்றும்; வியாபாரிகளாய் வந்தவர் இந்தியாவை அடிமைப் படுத்திக் கொண்டதை நீக்கிச் சுதந்தரத்தைப் பெறமுயலும் போராட்டத்தில் ஸ்திரீகளும் உழைக்கவேண்டு மென்றும்; மாதர்களும் மனப்பூர்வமாய் உதவினு லொழிய சுயராஜ்ய விருப்பம் ஒரு கனவாகவே முடியுமென்றும்; இதுவரை இவ் வுண்மையை மறந்து பெண் கல்வியில் உபேக்ஷையாயிருந்த ஆடவர், உடனே பெண்களைக் கல்வி பயிற்றித் தேற்றுவதில் அதிகம் பாடுபட வேண்டுமென்றும்; இந்திய நாகரிகத்திற் சிறந்தன யாவும் பெண்கள் மனத்தில் ஆழ்ந்து வேரூன்றி யிருப்பதால், கல்வியில் தேர்ந்த இந்திய மாதர்கள் அபூர்வ சாமர்த்தியத்தோடும் தேச பக்தியோடும் தந்நயம் கருதாத தியாக புத்தியோடும் உழைக்க வல்லவர் என்றும் கூறினது மன்றி; நமது இந்திய சகோதரி சகோதரர்களில் சில சாதியாரைத் தீண்டாதவராக வைத்து நாட்டுக்குப் பெருங்கேட்டை விளைக்கும் விஷயத்தில், பெண்கள் முன் வந்து உழைத்து, தங்கள் குழந்தைகளை இளமை தொட்டே அவ்வித எண்ணம் மனத்தில் உதியாதபடி வளர்த்துப் பழக்கி, தீண்டாமை என்னும் அநியாயத்தை வேரோடு களைந்து விடவேண்டு மென்றும் கூறினர். முடிவில், மகாத்மா காந்தியின் சத்யாக்ரக ஒத்துழையாமையே சுயராஜ்யம் பெறும் வழியென்றும்; உடுக்கும் உடைக்கும் பிற நாட்டார் கைபார்த்துப் பணத்தைப் பாழாக்காமல், ஆடம்பரமான வீண் செலவுகளைக் கைவிட்டு, வீடு தோறும் நூல் நூற்று நெசவு செய்து, ஆண் பெண் அடங்கலும் கதராடையையே உடுத்து வந்தால், நாட்டின் ஏழைமை நீங்கி, இப்பொழுது பட்டினியாய் வருந்தும் ஏழை ஜனங்களுங் கூட க்ஷேம லாபங்களையடைந்து, இன்புற்று வாழ்வர் என்று கூறி முடித்தார். பிறகு இக்கொள்கைக் கிணங்கத் தீர்மானங்கள் நிகழ்ந்தன. நமது சகோதரிகள் இவ்வாறு முன் வந்து உழைத்து உதவுவராயின், சுயராஜ்யம் அதி சமீபமாகி விடு மென்பது திண்ணம்.



பிற தேச ஸ்திரீகள் :—துருக்கி நாட்டு ரயில் வண்டிகளில் பிரயாணஞ் செய்யும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடையே இது வரை திரைகளுண்டு; இப்பொழுது இத் திரைகளை நீக்கி விட்டார்கள். ஈஜிப்ட் தேசத்து ஸ்திரீ ஸங்கத்தின் முயற்சியால் விவாக வயது, ஆண்களுக்கு 18-க்கும், பெண்களுக்கு 16-க்கும் குறைவா யிருக்கக் கூடாது என்று, சட்டம் ஏற்பட்டு விட்டது.

ஆயுள் விருத்தி :—அமெரிக்கா தேசத்து எலிஸபெத் மில் பாங்க் அண்டர்ஸன் அம்மையார், மனிதரது வாழ் நாளை நீடிப்பதற் குரிய வழிகளை ஆராய்ந் தறிவதற்கென்று, மூன்று கோடி ரூபாய் நிதியை அளித்திருக்கின்றனர்.

## ஒரு விவாகம்

பெல்ஜியம் தேசத்து வால்கூற்று பட்டணத்திலே, 73 வயதுள்ள எலாய்ஸ்டு போட்ஸ் என்னும் விதந்து, 78-வயதான நெவ்ரிமாண்டு என்பவரை விவாகம் செய்து கொள்ளப் போகிறுள். 103-வயதான அவள் தகப்பனே 'தாரை வார்த்துக்' கொடுக்க, 76-வயதான அவளுடைய தமக்கை, தோழிப் பெண்ணுயிருப்பாள். இதுவும் ஒரு விந்தையே.

ஈச்சமர அதிசயம்:—வங்காளத்தில் ஒரு கிராமத்திலே ஈச்சமர மொன்றிருக்கிறது. முதலில் ஆறு வருஷகாலம் அதிலிருந்து கள் இறக்கப்பட்டது. ஏழாவது ஆண்டில், மரத்தின் உச்சியில் சில கிளைகள் முளைத்தன. அதைக் கண்டு, மரத்தில் ஜடாமுனி குடியேறி விட்ட தென்று பயந்து, கள்ளிறக்குவதை நிறுத்தி விட்டனர். இப்பொழுது அந்த ஈச்ச மரத்தின் தலை இருபத்தொரு கிளைகளாகப் பிரிவு பட்டிருக்கிறது. ஒவ்வொரு கவறும் நன்று வளர்ந்தோங்கி, ஈச்சின் தலைபோலவே இருக்கிறது.

இலக்கணப் பயிற்சியும் பாஷா ஞானமும்:—இலக்கணப்
பயிற்சிக்கு மட்டுக்கு மிஞ்சிய கவுரவத்தையும் அதிகாரத்
தையும் கொடுத்து, இலக்கண விதி விலக்குக்களை வேத
வாக்காக மதித் தொழுகுவது, பொதுவாய்ப் பலமொழிப்
புலவர்க்குள்ளும், விசேஷமாய்த் தமிழ்ப் புலவர்க்குள்ளும்
வழக்கமா யிருக்கிறது. இவ் வபிப்பிராயம் பாஷையின்
மேல்வளர்ச்சிக்குத் தடை யாவதை இவர் கருதுவதில்லை.
"திசட சக்கரம்" என்று கவி கூறி விட்டதைச் சரிப்
படுத்துவதற் கென்றே புதியதோர் இலக்கண நூலை இயற்
றினராம்! "இலக்கியம் கண்டதற்கு இலக்கணம்
இயம்புதல்" என்னும் இலக்கண வாக்கையுமே இவர் மறந்
தொழுகுவர். இன்னார், பல பாஷைகளைக் கற்றுக் கரை
கண்ட பெயர்போன மேதாவியான பண்டிதர் ஸேஸ்
என்பவர், "பாஷா சாஸ்திர தீபிகை" என்னும் நூலில்,
இவ்விஷயத்தைப் பற்றிப் பின் வருமாறு கூறி யிருப்
பதைக் கவனிப்பாராக:— ஒரு பாஷையின் மெய்த்
தன்மையை உள்ளபடி அறிந்து, அதன் சுவைகளை அநுப
வித்தற்கு, இப்பொழுது நடைபெறும் இலக்கணப் பயிற்சி
முறை பெருந் தடை யாகிறது. பாஷை என்பது, புஸ்த
கங்களிலும் அகராதிகளிலும் அடங்கி, ஏட்டுச் சுரைக்
காய்கள் போன்ற இலக்கணிகளின் கண்டிப்பான கட்டளை
களுக்குக் கீழ்ப் படிந்து திகழும் ஒரு செயற்கைப் பொரு
ளன்று. தன்னைப் பேசும் மக்களின் மனோபாவத்தையும்
ஆத்ம சலனத்தையும் வெளிப் படையாகப் பிரதிபலித்
துக் காட்டி, அதற்கேற்ற வண்ணம் இடைவிடாது மாறிக்
கொண்டு வரும் ஓர் உயிர்வாக்கே அது. பாஷையில்
நிகழும் ஒரு பிரயோகம் சரியோ தப்போ என்று மதிப்
பிட, இலக்கண விதிகளைப் பார்க்க வேண்டுவதில்லை;
அப் பாஷையைப் பேசுவோர்க்குள் அது சாதாரணமாய்
வழங்குகிறதா, நெடுநாளைய வழக்கமா யிருக்கிறதா, அம்
மொழிவாணரில் பெரும்பாலார் அதைச் சரியென்று ஒப்பு
கிறார்களா என்பதுதான், அதை நிதானிக்கும் உரை கல்
லாகும்; இவ் வாராய்ச்சிப் படி சரியாயிருந்தால், அதுவே
இலக்கணப் படியும் சரியானது; இலக்கணத்தில் புலவர்
எழுதி வைத்தபடி யன்று. பொறுக்கி யெடுத்த சில புலவர்
நூல்களை மேற்கோள்க ளாகவும் 'ஆன்றோர் ஆட்சி'
யாகவும் கொண்டு, அவற்றுக் கிணங்கக் கண்டிப்பான
இலக்கண விதி விலக்குக்களை ஏற்படுத்தி வரையறுத்து,
அவ் விலக்கணப்படி இல்லாதன வற்றை யெல்லாம் சிறப்
பாகவும் தவறாகவும் கருதும்படி மாணவருக்குப் போதித்



தல், முற்றிலும் தவறாகும். மாணவர் கற்க வேண்டிய
முதற் பாடம் யாதெனின், பாஷையில் நடைபெறும்
பிரயோகங்களில், இதுதான் சரி இது தவறு என்று
தீர்மானிக்கும் அதிகாரம் இலக்கணத்துக் கில்லை என்
பதே. அவ் அதிகாரம் தமக்குண்டென இலக்கணப் புல
வர்கள் கூறுவது தவறு. ஒரு பாஷையில் இப்பொழுது
சரியென வழங்கும் பிரயோகம் பிற்காலத்தில் தவறாகக்
கருதப்படலாம்; ஒரு பாஷை நேற்று விலக்கித் தள்ளியதை
இன்று ஏற்றுக் கொள்ளலாம். இலக்கண விரோதமாக
இன்று நாம் கருதும் பல பிரயோகங்கள், முன்பு பெரு
வழக்கில் இருந்தனவாக அடிக்கடி ஏற்படுகிறது. இப்
பொழுது, இலக்கணப் பொருத்த மானவை சரியானவை
என்று வழங்குவன சில, போலி யுவமை பற்றி வந்திருக்க்
லாம். இலக்கிய விஷயம் எப்படியாயினும், இலக்கணத்
துக்கு நல்ல காலம் பொல்லாத காலம், சுக்கிர திசை
அஷ்டமச் சனி என்னும் காலபேதங்களில்லை. இலக்கணம்
எப்பொழுதும் இலக்கியத்தைப் பின் பற்றி ஒழுக
வேண்டியதே. சில நூல்களை ஆராய்ந்து, அவ் வாராய்ச்சி
யின் பயனாகக் கொண்ட இலக்கண விதி விலக்குக்களை
மட்டும் நன்கறிந்த ஒரு புலவனை பாஷா ஞானியாகக்
கருதுவது, வஸ்துவை விட்டு நிழலைப் பற்றுவது போ
லாகும்; தானாகவே சுரந்து ததும்பிப் பெருகும் உயிர்
மொழியூறுணி நீரை விட்டு, இம்மியும் முன்பின் அசைய
விடாத வில்லங்கங்களாகும் கடினமான இலக்கண விதிக
ளாம் பனிக் கட்டியைக் கொள்வது போலாகும்."

இந்தியாவின் ஏழைமை:—மைசூர் திவானாக விளங்கிய
ஸர் M. விசுவேசுவரய்யா, ஐரோப்பிய மகா யுத்தத்துக்கு
முன், தேசத்தின் மொத்தச் சொத்து, மாத வரும்படி,
வியாபாரம் இவற்றைக் கணக்கிட்டுத், தலைக்கட்டுப்படி
சராசரி விகிதம் போட்டுப் பார்த்துப், பின்வருமாறு
கூறுகிறார்:—

ஒரு தலைக்கட்டின் சராசரி:—

| நாடு | மொத்தம்சொத்து | மாதவரும்படி | வியாபாரமதிப்பு |
|---|---|---|---|
| இந்தியா | ரூ 180-0-0 | 5–0–0 | 22-8-0 |
| கானடா | ரூ 550-0-0 | 46-11-0 | 510-0-0 |
| இங்கிலாந்து வகையறா | ரூ 720-0-0 | 60–0–0 | 640-0-0 |

மரண விகிதத்தையும் ஆயுள் நீடிப்பையும் கணக்கிட்டாலோ, நமது இந்தியாவே அக்ர தாம்பூலத்துக்கு உரியது. ஏனெனில், கானடா, இங்கிலாந்து நாடுகளில் 1000க்கு 14 பேர் செத்தால், இந்தியாவில் ஆயிரத்துக்கு முப்பதுபேர் சாகிறார்கள்; இந்தியரின் சராசரி வாழ்நாள் 24 வருஷமானால், ஐரோப்பிய தேசங்களில் 45 வருஷமாயிருக்கிறது. படிப்பு விஷயத்தில், இந்தியாவில் நூற்றுக்கு ஆறு பேருக்குத் தான் எழுதப்படிக்கத் தெரியும்; இதர நாகரிக நாடுகளில் 100க்கு 90 பேர் வரை படிப்பாளிகள்.

**இந்தூர் ஹோல்கார் மகாராஜாவின் புதிய அரமனை:—** வறுமை இவ்வாறாக, சுதேச மன்னர்களில் ஒருவரான இந்தூர் மகாராஜா அவர்கள், தம் முன்னோரும் தாமும் இது வரையும் வாழ்ந்துவந்த அரமனை போதாமல், 33 அறைகளைச் சேர்த்து அதைப் புதுப்பிக்கிறார். இவ்வேலை நான்கு வருஷங்களாக இங்கிலாந்தில் நடந்து வருகிறது. இதன் மொத்தச் செலவு 25 லக்ஷம் ரூபாவுக்கு மேலாகிறது. பளிங்குக் கற்களாலாகும் ஸ்நான அறை மட்டுமே முப்பத் திரண்டாயிரம் ரூபாவுக்கு மேலாகிறது. சகல வேலைகளும் சீமையிலேயே நடக்கின்றன. குதிரை தூக்கிப் போட்டது மன்றிக் குழியும் தோண்டியது போல, ஏழை இந்தியக் குடிகள் கஷ்டப்பட்டுக் கொடுக்கும் வரிப் பணத்தை வீண் செலவு செய்வது மன்றி, அச்செலவையும் இந்தியாவிலே செய்து அவர்களுக்குச் சிறிதேனும் உதவாமல், வெள்ளைக்காரக் கூலிகளும் வியாபாரிகளுமே லாபம் அடையும்படி செய்வது, தற்கால ராஜ நீதி போலும்! —மா.

**சுதந்தரம்:—**"எந்த நாட்டார், சாதியார்க்குமே, சுதந்தரத்தை அடைய ராஜபாதை எதுவும் இல்லை; ஆனால், ஒரு குறுக்கு வழி மட்டும் உண்டு: அதாவது, சாகத் துணிவது தான். பெரியதோர் வேலையில் சாகத் துணிந்துவிட்டால், அதையொட்டிய எவ்வளவு கசப்பான வேலையும் இனிப்பாகிவிடும்"—மௌலானா மகமதலி.






* "பத்மாவதி—சரித்திரம் முதல் இரண்டு பாகங்களும் சேர்ந்தது—ஐந்தாம் பதிப்பு—பல சித்திரப் படங்களும் 416 பக்கங்களும் அடங்கியது—விலை ரூபா இரண்டு தான், சென்னை—மயிலாப்பூர், ஆசிரியர் அச்சுப் பிரசுராலயம்—புஸ்தகசாலையில் கிடைக்கும்.




ஸ்ரீமதி M. லக்ஷ்மியம்மாள், B. A., Hons., லண்டன்

இங்கே இப்பொழுது, வஸந்த கால ஆரம்பமாம்.
இன்னும் ஒரு மாதத்துக்குள் மழைகாலம் ஓய்ந்துவிடு
மென்று ஜனங்கள் படும் சந்தோஷம் கொஞ்சமல்ல.
இந்த வருஷம் கொடுங் குளிர்; பத்து வருஷங்களாக
இவ்வளவு கடுமையான மழை காலம் கண்டதே யில்லை
யென்று சிலபேர் சொல்கிறார்கள். இப்பொழுது கிட்டத்
தட்ட இரண்டு வாரங்களாக ஒரே மப்பு; காலையில் எங்கும்
இலேசாய்ப் புகை பரவினாற் போல் காணப்படும்; அத
னூடே கூடி, மரஞ் செடிகளும், கட்டடங்களும் பிர
மாண்டமாய்த் தோன்றும்; அநேகமாய் மத்தியானத்துக்
குள் இந்த மப்பு இருண்டு, சிறிது தூரத்துக் கப்பால்
கண்ணுக்கு ஒன்றும் தெரியாமல் மறைத்துவிடும். சில
சமயங்களில் பத்து நிமிஷத்தில் மப்புக் கலைந்து மாயமாய்ப்
போய் வெயி லடிக்கும்; அப்படி யில்லாமல் நாலைந்து
நாளாக ஒரே மூடு பனியாக இருந்தால் தான் சங்கடம்;
அப்பொழுது மூச்சு விடுவதே கஷ்டம்; இதைவிடப் பனி
பெய்தாலும் மழை பெய்தாலும் ஜனங்களுக்குத் திருப்தி
தான்; ஏனெனில் அப்பொழுது குளிர் குறையும்; காற்று
சுத்தமா யிருக்கும்.

இங்கு நான் கண்ட புதுமைகளில், பனி மழையை
விட அழகான காட்சி வேறொன்று மில்லை. முதல் முதல்
பார்த்த வுடன் அது இன்ன தென்று எனக்குத் தெரிய
வில்லை. ஜன்னல் வழியாகக் காற்றில் ஏதோ பஞ்சு பறப்
பது போல் காணப்பட்டது; வெகு சீக்கிரம் பனிச் சிதள்
கள் இரண்டு மூன்றி லிருந்து இருபது முப்ப தாகத்
திரண்டு விட்டன; அரை மணி நேரத்துக்குள் பூமியெல்
லாம் புல் பூண்டு தெரியாமல் பனி மூடிவிட்டது. பனியை
அள்ளி வாயிற் போட்டுக் கொண்டால், அதன் ஸ்பரிசம்
சிலீரிட்ட கற்கண்டுப் பொடிபோ லிருக்கும்; அதைச்
சேர்த்து நொறுக்கிப் பந்தாடலாம்; பொம்மைகள் செய்ய



லாம்; அது கட்டியான பின்பு, உஷ்ணத்தால் இளகுமே
யன்றி லகுவில் உடையாது. கெட்டிப் பனியின்மேல்
குழந்தைகளும் பெரியவர்களும் சறுகி விளையாடுவது வெகு
அழகான கண்காட்சி. பனி பெய்து ஓய்ந்தபின், பாதையி
லிருந்து ஒரு புறமாய் ஜனங்கள் அதை விளக்கு மாற்றால்
தள்ளிக் குவிப்பார்கள். இந்தக் குவியல்கள் இளகித்
தண்ணீராய் ஓடும்பொழுது, ஜனங்கள் சறுக்கி விழாமல்
பத்திரமாய் நடக்கவேண்டும்.

மப்போ, மந்தாரமோ, பனியோ, மழையோ, காலை
ஏழு மணி முதல் இராத்திரிப் பன்னிரண்டு மணி வரை,
ஜனங்கள் தெருக்களில் கூட்டங் கூட்டமாய்ச் சாய்வதற்
குக் குறைவே யில்லை. தலையில் தொப்பி, கழுத்து முதல்
கணைக்கால் வரை அழுத்தமான கோட் ஒன்று, காலில்
ஜோடு, கையுறை தரித்த கையில் குடையொன்று, பை
யொன்று: இவ்வித உடை தரித்து ஆண் பாலரும் பெண்
பாலரும் ஆயிரக் கணக்காக அவரவர்கள் பாட்டைப்
பார்த்துக் கொண்டு போவார்கள்; தோட்டங்களருகில்
உலாத்துபவர்களைத் தவிர, மற்றவர்கள் நடை ஓட்டந்
தான். தெருவிலும், ரயில், பஸ் வண்டிகளிலும், ஜனங்கள்
அநேகமாய் மௌனம் சாதிப்பார்கள்; அல்லது மெது
வாய்ப் பேசுவார்கள்; உரத்த குரலில் பேசுவோர்கள்
அநேகமாய் அயல் நாட்டுக் காரர்கள் தான்.

'பஸ்' வண்டிகளைப் பெண்கள் ஓட்டி நான் பார்க்க
வில்லை; யுத்தம் முடிந்த பின் பெண்கள் அந்த வேலையை
விட்டு விட்டார்களாம். பஸ் வண்டிகளிலும், ரயில் வண்டி
களிலும், தோல் வாரைப் பிடித்துக் கொண்டு பெண்கள்
நிற்க, புருஷர்கள் சௌக்கியமாய் உட்கார்ந்துக் கொண்
டிருப்பதை அநேகந் தடவை பார்த்திருக்கிறேன். சில
வருஷங்களுக்கு முன் இவ்விதக் காட்சியை ஈனமென்று
சொல்வார்களாம்; இப்பொழுதோ, பெண் பாலாரும்,
புருஷர்களுடன் சமமான சுதந்தரங்களுக்கு உரியவர்கள்
என்று ஏற்பட்டு விட்டதால், பெண்களை 'மெல்லியலார்'
என்று ஆதரிக்கும் கொள்கைகள், முன்னவ்வளவு வழங்க
வில்லையாம். பெண் போலீஸாரைப் பற்றி நான் கேள்விப்
பட்டிருக்கிறேனே யொழிய, இன்னும் ஒருத்தியையேனும்
பார்க்கவில்லை; ஆனால், கடைகளிலும், "ஹோட்டல்"
களிலும், தபாலாபீசுகளிலும், பெண்கள் தான் காணப்
படுவார்கள். இளம் பெண்கள் கைப்பாடு பட்டு ஜீவனோ

பாயம் செய்வதும், தன்னந் தனியே குடித்தனம் செய்வ
தும், தனி வழிப் போவதும், இப்பொழுது சகஜம்; அவர்
கள் பாட்டிமார் நாளில் கிடையாது. இங்குள்ள ஸ்திரீ
களின் சுதந்தரமும் சாமர்த்தியமும் அவர்கள் ஜன சமூக
வாழ்க்கையில் ஊன்றி உதித்தன வாகையால், ஒருவரும்
அவற்றை அதிசயமாகப் பாராட்டுவதில்லை. சாமர்த்திய
மில்லாத அயல் நாட்டுப் பெண்கள் கூட இங்கு தைரிய
மாய் வாழலாம்; இது பெண்கள் இரகசியம்.

விருந்தாளிகளை அழைத்துக் கொண்டு, 'ஹோட்டல்'
களில் சாப்பிடுவதும், வேலை யொழிந்த சாவகாச நேரத்
தைத் தோட்டங்களிலும், 'க்ளப்' களிலும், நாடக சாலைகளி
லும் கழித்துவிட்டுப், படுக்க மட்டுந்தான் விடுதிக்குப்
போவதும் இங்கே சகஜம். வீட்டு வாடகை அநியாயச்
செலவு; தவிரவும் வீட்டுக்குத் தக்கபடி சாமான்கள் வாங்
கிப் போடுவதும், வேலைக்காரர்களை அமைப்பதுவும் வெகு
கஷ்டம். சாதாரண வீடுகளில், அநேகமாய், சமைய
லுள்ளும், சாமானுள்ளும் நிலவறைக் கட்டடங்கள்; படுக்
கை யறைகள் மாடியில்; சாப்பாட்டுக் கூடமும், வரவேற்
கும் கூடமும், கீழறைகள்; இவை யிரண்டுந் தான் வீட்டின்
முக்கியமான பாகம்.

இந்த அறைகளில் ஜன்னல் திரைகள், கம்பளங்கள்,
நாற்காலி மேஜை தண்டுகள் முதலிய எல்லாம், ஒன்றுக்
கொன்று இசைந்த வர்ணங்களில் இருக்கவேண்டும்; சுவர்
களில் படங்களும் மேஜைகளில் பூக்களும் இல்லாத அறை
பாழிடம்போல் தான்; தீக்கணப்பிடத்தைச் சுத்தப்படுத்தி,
பளபளவென்று துடைத்து, அதன் மேல் பரப்பைப் பலவித
மாக அலங்கரித்து வைக்க வேண்டியது குடித்தனத்
துக்கு லக்ஷணம். சாப்பாட் டறையில் வைத்திருக்கும்
சீனாப் பாத்திரங்கள், வெள்ளிப் பாத்திரங்களைக் கொண்டு,
ஒரு குடும்பத்தின் அந்தஸ்தை சுமாரராய் மதிக்கலாமாம்;
ஆனால், சமையலுள்ளில் உபயோகப் படுத்துவது, அநேக
மாய் இரும்பு அல்லது இனாமல் பாத்திரங்களே. சமையல்
காரிகளும், வேலைக்காரிகளும் அகப்படுவது, முன்னைக்
கிப்பொழுது எவ்வளவோ கஷ்டம் என்று எல்லாரும்
சொல்கிறார்கள்.

தினம் வேலை யொழிந்த பின்பு வேடிக்கையாய்ப்
பொழுது போக்க அவகாச மில்லா விட்டால், அதைப்
போல கஷ்டமும் ஈனமுமான வாழ்வில்லை யென்று அநேக



ஜனங்கள் நினைக்கிறார்கள். இந்தப் பட்டணத்தில் இருப
திருபத்தைந்து நாடக சாலைகளும், எத்தனையோ சித்திர
சாலைகளும், காட்சி பங்களாக்களும், தோட்டங்களு மிருக்
கின்றன; எங்குப் போனாலும் ஜனக் கூட்டமே. நான்
போன தடவை 'ஹைட்' தோட்டத்துக்குப் போயிருந்த
பொழுது, சுமார் முப்பது வயதுள்ள ஓர் ஏழைப் பெண்
பிள்ளை பிரசங்கம் செய்வதைக் கேட்டேன். அவளைச்
சுற்றி, தோட்டத்தில் உலாவ வந்த ஜனங்கள், கந்தல்
கோட் அணிந்தவர்கள் பலரும், சர்மக் கோட் அணிந்த
வர்கள் சிலரும் நின்றார்கள். ஏழைகள் படும் கஷ்டத்
தைப் பற்றி அவள் உருக்கமாய்ப் பேசிய பிறகு, பணக்
காரர்களையும் அவர்களுடைய நடையுடை பாவனைகளையும்
பற்றி வெகு மனக் கசப்புடனும், ஆங்காரத் துடனும்
பேச ஆரம்பித்தாள்.

குளிரின் கொடுமையால், படுக்கையும் கம்பளிகளும்
பளுவான உடைகளும் இங்கே அத்யாவசியம்; இவை யில்
லாமல், ஏழை ஜனங்கள் படும் கஷ்டத்தைப்பற்றி வெகு
கொடூரமான கதைகள் நான் கேட்டிருக்கிறேன். ஸர்க்கா
ரும், பரோபகாரிகளும், அக் கஷ்டத்தை நிவர்த்தி செய்ய
என்ன பாடு பட்டும், உலகத்தில் ஓரிடத்திலும் அது
தீரும் வழி இன்னும் ஏற்படவில்லை. நம்மூரில் என்ன
விசேஷம்?

## கல்வி விஷயக் குறிப்புக்கள்

**நமது விசுவ வித்யாலயம் :—** (University) இதன் பரி
பாலன விஷயமாய்ச் சென்ற வருஷம் நிர்மாணிக்கப் பட்ட
சட்டம் மார்ச்சு மாதம் 4 ஆம் தேதி யன்று அமுலுக்கு வந்தது.
அச்சட்டத்தின் கீழ்த் தேர்ந் தெடுக்கப்பட்ட பரிபாலன ஸபை
(Senate) இம்மாதம் 4 ஆம் தேதியன்று கனம் கவர்னரது அக்
கிராஸனத்தின் கீழ்க் கூடியது. அச்சமயம் சட்டத்துக்கு அனு
குணமாய் இயற்றப் பட்டுள்ள நிபந்தனைகளும் நமூனாக்களும் விவா
திக்கப் பட்டு, வெகுவாய் அங்கீகரிக்கப் பெற்றன.

ஸெநட்டைத் தவிர வேறுமூன்று சபைகளும் அமைக்கப்பட்
டுள்ளன. அவையாவன—ஸிண்டிகெட் (Syndicate), அகாடெமிக்
கௌன்ஸில் (Academic Council), கௌன்ஸில் ஆப் அபிலியே
டெட் காலேஜெஸ் (Council of Affiliated Colleges). முதற்
கூறப்பட்டது காரிய நிர்வாக ஸபை. இரண்டாவது ஸபை, கல்லூரி
களில் மாணவர்களுக்குப் போதிக்க வேண்டிய பாடங்கள் என்ன
வென்றும், உயர்தரப் பரீக்ஷைகள் எவ்வாறு நடை பெற வேண்டு
மென்றும், சாஸ்திர ஆராய்ச்சிக்குரிய சௌகரியங்களை எவ்வாறு
அமைத்து வைத்தல் வேண்டு மெனவும், மற்றும் உயர்தரக் கல்வி
அபிவிர்த்தி விஷயமாய்ச் செயற்பாலன யாவற்றையும் ஆராய்ந்
தறிந்து, தகுந்த நிபந்தனைகளை இயற்றும் ஸபையாகும். ஆகவே இச்
சபையில் கல்வி விஷயமாய் அனுபவம் வாய்ந்தவர்களே இருத்தல்
பாங்காகும். ஆயினும், இச்சபையிலே உயர்தரக் கல்வி என்ரு
லென்ன என்றறியாச் சில அங்கத்தினரும் உளர். தேர்தல்களில்
நேரும் விந்தையென இதைச்சொல்லல் தகும். மூன்ருவதான ஸபை
விசுவ வித்யாலயா க்ஷேத்திரத்தன்றி, அதாவது, மதராஸ் நகரத்தி
லன்றி, பிறி தூர்களி லுள்ள கல்லூரிகளது தேவைகளை அறிந்து,
அவைகளைப் பூர்த்தி செய்யும் வழிகளை ஸிண்டிகேட்டுக்கும்,
ஸெனட்டுக்கும் உணர்த்துவதே தன் கடமையாய்க் கொண்டுளது.
பிரதி ஜில்லாவிலுமுள்ள டிஸ்ட்ரிக்ட் போர்டார்களாலும் முனிஸி
பாலிடியார்களாலும் தேர்ந்தெடுக்கப் பெற்றவர்களும், கல்லூரித்
தலைவர்களும், வெகுவாய் இச்சங்கத்துளர்.

மேற் கூறிய சங்கங்கள் இருந்தென்? இல்லாவிடி லென்?
விசேஷ திரவியம் கையி லிருந்தா லன்ரோ விசுவ வித்யாலய
விஷயங்கள் ஒழுங்காய் நடை பெறும்? தற்காலத்து நம் மாகாண
கவரன்மென்டார் பொக்கிஷம் இருக்கும் நிலையை உத்தேசித்தால்,
அதிகப் பணம் அவர்கள் செலவு செய்தல் அசாத்திய மென்பது
திண்ணம். ஆதலின் புதுச் சட்ட நிர்மாண விஷயமாய் கனம்
வித்யா இலாகா மந்திரி பட்ட சிரமம் முற்றிலும் வியர்த்தம் என
எண்ணுபவர் வெகு பேருளர். அத்தகைய எண்ணங்களை யெல்
லாம் பொய்யாக்குவது நமது மந்திரியாரின் கடமை.

**4-ஆம் தேதி நடந்த ஸெனட் கூட்டம்:** அக்கிராஸனம்
வகித்த கவர்னரவர்கள், மெம்பர்களை வரவேற்று, இம்மாகாணத்தில்
உயர்தரக் கல்வி விருத்தியாகும் வண்ணம் யாவரும் ஒத்துழைக்க
வேண்டு மெனக் கூறி விட்டு, ஸபை நீங்கினர். பிறகு வைஸ்ச்
சான்ஸெல்ல ரான பாதிரியார் மெக்பெயில் துரை அவர்களது



அக்கிராஸனத்தின் கீழ் விவாதங்கள் நடை பெற்றன. அவைக
ளுள் மிக ருசிகரமானவை இரண்டு:

முதலாவது:—பட்டப் பரீக்ஷையில் தேறினவர்களுக்குப் பட்ட
மளிக்கும் நாளன்று, அப் பட்டத்துக் குரியவர்கள் ஒரு விதமான
கறுப்பு கௌன்களையும் (Gowns), ஹூட்களையும் (Hoods)
அணிதல் வேண்டு மென ஓர் நிபந்தனை யுண்டு. அந்நிபந்தனை சரி
யல்ல வெனப் பலர் ஆக்ஷேபித்தனர். ஸ்வதேசித் துணிகளைக்
கொண்டு அவ்வாடைகளைச் செய்தல் அஸாத்தியமா யிருப்பதால்,
அவைகள் தேவை யில்லை யெனக் கூறினர் சிலர்; நம் தேசத்தில்
கறுப்பு நிறம் அமங்கலக் குறியாயிருப்பது பற்றி, அங்கிகள் கறுப்
பாயிருத்தல் கூடாதென மொழிந்தனர் வேறு சிலர்; அவைகள்
ஸ்திரீகள் அணிந்து கொள்வதற்குப் பாங்காயில்லை யென வற்புறுத்
தினர் மற்றுஞ் சிலர். இக்காரணங்கள் பற்றி, மேற் கூறிய
ஆக்ஷேபங்களுக்கு இடமின்றி, வேறொரு நிபந்தனையை ஸிண்டி
கேட்டார் இயற்ற வேண்டு மெனத் தீர்மான மாயிற்று.

இரண்டாவது, தற்காலத்தில் மதராஸ் கிரிஸ்டியன் காலேஜ்
போன்ற மிஷனரி சங்கத்தார்களால் நடத்தப் பட்டு வரும்
கலாசாலைகளில், எல்லா மாணுக்கர்களும் பைபில் பாடத்தை கட்
டாயமாய்ப் படிக்க வேண்டுமென ஓர் ஒழுங்குண்டு. இவ்வொழுங்
குக் குட்பட்டா லன்றி, ஓர் மாணவன் அக்கலாசாலைகளில் ஏற்றுக்
கொள்ளப் பட மாட்டான். இவ்வாறு பிள்ளைகளைக் கட்டாய மத
போதனைக்கு ஆளாக்குவது நியாய மன்று என வெகு வருஷங்
களாய் நம் தேசத்தில் வாதிக்கப் பட்டு வருகிறது. ஆயினும்
மிஷனரி சங்கத்தார்களது செல்வாக்கின் காரணத்தாலும், கவரன்
மெண்டார்கள் தாங்கள் மத விஷயத்தில் தலையிடுவதில்லை யெனக்
கூறி வாளா விருப்பதாலும், ஜனங்களது ஆக்ஷேபணை ஏறவில்லை.
ஆயினும் செனட் ஸபையார் இத்தகைய ஒழுங்கை அங்கீகரிக்கக்
கூடாதென்றும், ஓர் மாணக்கனுக்கு பைபில் கிளாஸில் இருப்ப
தற்கு ஆக்ஷேபணை யுண்டெனக் கூறின், அதனை மதித்து, அவ
னது மனச்சாக்ஷிக்கு அனுகுணமாய் அவன் நடந்து கொள்ள
இடந்தர வேண்டுமென்றும்; எம் காலேஜில் யாவரும் மதப் படிப்
புக்கு உட்பட்டே தீரவேண்டு மென ஓர் சங்கத்தார் கூறின், அவ
ரது காலேஜை யூனிவர்ஸிடியார் தம் காலேஜாய் அதனை அங்கீகரிக்
கக் கூடாதென்றும், ஓர் அங்கத்தினர் பிரேரேபித்தனர். இந்தப்
பிரேரேபணையை முற்றிலும் எதிர்த்துப் பேசியவர் சிலரே. மற்ற
வர்களுள் பலர், பிரேரேபித்தவர் கட்சி நியாயந்தா னென்றும், ஆயி
னும் யூனிவர்ஸிடியார் இதில் ஸம்பந்தப் படக் கூடா தென்றும்,

கவர்ன்மென்டார் அத்தகைய காலேஜுகளுக்கு திரவிய சகாயம்
அளித்தல் கூடாதெனச் சட்ட சபையில இப் பிரேரேபணையைக்
கொணர்தல் வேண்டு மெனவும் வாதித்தனர். ஆராய்ந்து பார்ப்
பின், இவ்வாதம் யுக்த மன்றென விளங்கும். உயர்தரப் படிப்பின்
முக்கிய லக்ஷணம், ஒருவர் புத்தி சம்பந்தமான விஷயங்களில் கட்
டாயம் யாதுமின்றித் தாமே ஆலோசித்துத் தாமே முடிவுக்கு வரு
வதேயாம். ஆதலின் உயர்தரப் படிப்புக் குரிய ஸாதனங்களை
அளிப்பதற்கென அமைந்த கல்விச் சாலைகளில், மாணவரது மனத்
துக்கும் மனச்சாக்ஷிக்கும் யதேச்சையாய் ஸஞ்சரிப்பதற்கு இடங்
தராது தளைபோடுவது நியாயமாமோ? ஆயினும் இவ்வாதம் முடிவு
பெற்ற இறுதியில் வோட்டுகள் கணக்கிடப் பட்டபோது, 24 பேர்
களே பிரேரேபணையை ஆதரித்தனர்; 57 பேர்கள் அதனுக்கு
விரோதமாய்க் கைத்தூக்கின ராதலின், பிரேரேபணை தோற்றது.

**ஆந்திர விசுவ வித்யாலயம்:**—சென்ற மாதம் நடந்த
மாகாண சட்ட சபையில், மாகாண வரவு செலவு திட்டத்தை
யொட்டி நடந்த விவாதத்தில், ஆந்திர நாட்டில் பிரத்யேகமாய் ஓர்
விசுவ வித்யாலய ஸ்தாபனத்தைக் குறித்து என்ன முயற்சிகள்
செய்யப் பட்டுள்ளன வென்று சில ஆந்திர தேசத்து மெம்பர்கள்
வற்புறுத்திக் கேட்க, நம் மந்திரியார், மேற் கூறிய விஷயமாய்
ஒரு மசோதா திட்டமாய் வருகிற தென்றும், சீக்கிரத்தில் அம்
மசோதா விவாதத்துக்குக் கொணரப் படுமென்றும், கையில்
வேண்டிய திரவிய மில்லாத காரணத்தால் தாமத மென்றும் விடை
யளித்தார். ஆயினும் அவ் வித்யாலயத்தை ஆந்திர நாட்டில் எந்தப்
பட்டணத்தில் ஸ்தாபிக்க வேண்டுமென இன்னும் தீர்மானிக்க
——ஓர் ஆசிரியன்.
வில்லையாம்.

**சென்னை நகரத்தில் கட்டாயக் கல்வி:**—நகர பரிபாலன
சபைகள் (Municipal Corporations) தத்தம் எல்லைகளுக்குள்
வாழும் சிறுவர் சிறுமிகள் கல்வி கற்பதைக் கட்டாயப் படுத்தி
அதற்கு வேண்டிய வரி தண்டலாம் என்னும் சட்ட நிபந்தனைப்
படி, சென்னை நகர பரிபாலன சபையின் கல்வியி லாகா சபா நாயக
ரான ஸ்ரீ. T. வரதராஜுலு நாயுடு அவர்களின் பிரேரணையால்,
சென்னை நகர்க்குள் ஆரம்பக் கல்வி கட்டாயமாகப் போகிறது.
இவ்வேற்பாடு, ஆண்டு தோறும் சிறிது சிறிதாகப் பரவி, எழு வரு
ஷங்களில், நகர முழுதும் வியாபித்து விடும். இதர நகரங்களும்
கல்வியைக் கட்டாயப் படுத்துதல் உசித மாகும்—ப-ம் ப-ர்.

—✿—

## ஜப்பானும் ஜப்பானியரும்

Rev. F. கிங்ஸ்பேரி, B.A., சென்னை

[சீனாவுக்குக் கிழக்கேயுள்ள எஸ்ஸோ, ஹாண்டா, ஷிக்காது,
கிஷ்யு என்னும் பெருந்தீவுகள் நாலும், ஏறக்குறைய நாலாயிரஞ்
சிறு தீவுகளும் சேர்ந்தது ஜப்பான் தீபகணம். இதனோடு வடக்கே
ஸகேலியன் தீவில் தென்பாகமும், தெற்கே பார்மோசா தீவும்
இக்காலத்தில் ஜப்பானோடு சேர்க்கப்பட் டிருக்கின்றன. அன்றியும்
கோறீயா நாடும் இப்பொழுது ஒருவாறு ஜப்பானுக்கு உட்பட்டிருக்
கிறது. ‘ஜப்பான்’ என்ற பெயர் சீனர்கள் இதற்குக் கொடுத்தது.
இதன் பொருள் “சூரியன் பிறக்கும் நாடு” என்பதாம். சீனாவுக்குக்
கிழக்கே இருப்பதால் இப்பெயர் வந்தது. ஜப்பானுக்கு ஜப்பா
னியப் பெயர் டை-நிப்போன் என்பது. சென்னையிலிருந்து
கொழும்பு, பினங்கு, சிங்கப்பூர், ஹாங்காங்கு, ஷாங்—ஹாய்
துறைமுகங்கள் ஒவ்வொன்றிலும் இரண்டொரு நாள் தங்கித்
தங்கிச் செல்லும் ஒரு நீராவிக் கப்பல், ஜப்பானிலுள்ள யோக்கோ
ஹாமா துறைமுகம் போய்ச்சேர இருபத்தொரு நாள் செல்லும்.
சென்னையிலிருந்து தோக்கியோ பட்டணத்துக்குச் சுமார் 5,500
மைல். விஸ்தீரணத்தில் பத்து ஜப்பான் கொண்டது ஓர்
இந்தியாவாகும்.]

இயற்கை அமைப்பின்படி உலகத்திலுள்ள மிக
அழகிய தேசங்களில் ஜப்பான் ஒன்று. வளை குடாக்களும்
தரை சூழ் கடல்களும் மலைகளும் மலை வீழ் அருவிகளும்
சிற்றாறுகளும் ஏரிகளும் பல உண்டு. பெரிய ஆறுகள்

இல்லை. மலைச்சாரல்களில் அடர்ந்த பசு மரங்கள் எங்கும் பார்க்கலாம். ஹாண்டா தீவில் பியூஜி (Fuji) மலைமேல் ஹிமம் என்னும் பனி படிந் திருப்பது, எத்தனையோ தூரத்தி லிருந்தாலும் கண்ணைக் கவரும் காட்சி. எரிமலைகள் ஜப்பானில் உண்டு. இம் மலைகள் ஓயாமல் எப்போதும் எரிவ தில்லை. இடைக் கிடையே இவைகளின் சிகரங்களிலே யுள்ள பெருந் துவாரங்கள் மூலமாய்த், தீயும் புகையும், தீமயமான கற் குழம்பும் புறப்படும்.

தென்னிந்தியாவிற் காணப்படும் மிருகங்களுக்குள்ளே எருமை யொன்றைத் தவிர மற்றவைகள் எல்லாம் அங்கே யுண்டு. ஜப்பானி லுள்ள நாட்டுக் குதிரைகள் குரூபிகள். நமது கழுதைகளைப் பார்க்கிலும் விகாரமுள்ளவைகள். உயரத்திலே பெரிய கோவேறு கழுதைகள் போலிருக்கும். அழகிய குதிரைகள் எல்லாம் புற நாடுகளிலிருந்து வந்தவை.



மழையுடை

ஜப்பான் மலை நாடாகையால் சாகுபடி பண்ணுவது இலேசல்ல. சம தரையில் பயிர் செய்வது மன்றி மலைச் சாரல்களிலே பாத்திகள் செய்து, அவைகளிலே தானியங்களை விதைப்பார்கள். நெல், வாற் கோதுமை, கோதுமை என்பன முக்கியம்; அவரை எங்கும் படர்ந்திருக்கும்; தேச்செடி (தேயிலைச் செடி) வெகு சாதாரணமாதலால், அதினால் வேலியடைப்பார்கள். புகையிலை, பருத்தி, அவுரி விளைகின்றன. பளபளப்புள்ள ஜப்பான் கறுப்பு வார்ணிஷ், ஒருவகை மரத்தின் பிசினாற் செய்யப் படுகிறது. உலோகங்களிலே செம்பு விசேஷம்; இது புற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகிறது. நிலக்கரி மிகுதி; மண்ணெண்ணெய் ஊற்றுக்கள் பல உண்டு.



பாஷை

主の祈禱　馬太傳第六章九節より十三節に至る
天にましますわれらの父よねがはくは御名をあがめ
させたまへ御國をきたらせたまへ聖旨の天になる
ごとく地にもなさせたまへ我らのなくてならぬ
食を今日もあたへたまへわれらに罪をおかせ
ものをわれらのゆるすごとくわれらのつみをもゆるし
たまへ悪おらにさそひになほあしきより救
ひだしたまへ國と權能と榮光は爾のかぎりなく
有たまふものなればなりアーメン

THE LORD'S PRAYER IN JAPANESE.

தென்னிந்தியா வுடன் ஒப்பிட்டால், ஜப்பான்: மிகக் குளிர்ந்தது. நான் ஜப்பானிலிருந்த காலத்தில் தென்னிந்தியாவின் உஷ்ணத்தை அந்நாட்டாருக்கு வர்ணிக்க என்னல் முடியவில்லை. அது போல ஜப்பான் எவ்வளவு குளிருள்ள தென்பதை இப்போது தமிழ் நாட்டாருக்குச் சொல்வது கஷ்டம். தென்னிந்தியாவிலே கோடைக்

கானல், உதகமண்டலம் என்னும் மலைச் சிகரங்களே மிகக் குளிர்ந்தவை. ஆயினும் குளிர் காலத்திலும் இங்கே "ஹிமம்" என்னும் பனி வகையைக் காணவே முடியாது. ஜப்பானிலோ, பியூஜி முதலிய உயர்ந்த மலைகளிலே வருஷம் முழுவதும் ஹிமம் காணப் படுவது மன்றி, குளிர் காலத்திலே, கடல் மட்ட முள்ள சம வெளிகளிலும் ஹிமம் பெய்யும். ஹிமம் பெய்வது கண்ணுக் கினிய காட்சி. இலவம் பஞ்சினும் இலேசாய்க் காற்றிலே யாடி யாடி மெதுவாய் இறங்குவது கண்டால் தெரியுமே யன்றி வர்ணிக்க முடியாது. ஆனல் குளிரோ?—கை விரல்க ளெல்லாம் இரத்தம் நிறைந்து நகக் கால்கள் வழியாய்ப் பீறிக் கொண்டுவர யத்தனிக்கும். மூக்கின் முனையும், உதடுகளும் வெடிக்கும். இது குளிர் காலத்திலே தான். அப்போதும் வீட்டுக்குள்ளே கம்பளி யுடை யுடுத்து அனற்றி (தீச் சட்டி)க் கருகே இருக்கும் போதல்ல.

ஜப்பானியர்;—ஜப்பான் ஜனத்தொகை முன் பின் ஐந்து கோடி. இவ்விஷயத்தில் இந்தியாவோ டொப்பிட்டால், ஆறு அல்லது ஆறரை ஜப்பான், ஓர் இந்தியா வாகும். இந்தியாவிலே முப்பத்திரண்டு கோடி ஜனங்க ளுண்டு. இந்தியாவிலே பேசப்படும் பாஷைகள் இருநூற்றுக்கு மேற்பட்டன என்கிருர்கள். சில்லறைப் பாஷைகளை யெல்லாம் பெரிய பாஷைகளுட் சேர்த்துக் கணக்கிட்டாலும் இருபது பாஷைகளுக்குக் குறைவில்லை. அன்றியும், உருவத்தாலும், நடை உடை பாவனைகளாலும் மாகாணத்துக்கு மாகாணம் இந்தியர் வேருய்க் காணப் படுவார். ஜாதி வித்தியாசம் என்பது ஒரே மாகாணத்திலே யுள்ளவர்களையும் வெவ்வேருகப் பிரிக்கிறது. இப்படிப் பட்ட வித்தியாசங்கள் ஜப்பானிலே தற்காலத்திலே கிடையா. ஜப்பானியர் யாவரும் பேசும் பாஷை ஒன்றே யொன்றும். ஜப்பானியர் யாவரும் மங்கோலிய வகுப் பென்னும் பெரும் பிரிவைச் சேர்ந்தவர்கள். இவர்கள் நிறம் மஞ்சள். இளமைப் பருவத்திலே புருஷரும் ஸ்திரீகளும் நிறத்தில் ஐரோப்பியரைப் போலக் காணப்படினும், நடுப் பிராயம் வருவதற்கு முன்னமே மஞ்சள் நிறமே அவர்களை மேற் கொள்ளுகிறது. உயரத்திற் சிறிது குள்ளர். சரிந்த கண்ணும், உயர்ந்த தாடை யெலும்பும் சப்பை மூக்கும் உடையவர்கள். இதனல், இவர்கள் குரூபிகள் என்று எண்ணவேண்டா. உருவத்திலே சதுரமும் வட்டமும் வெவ்வேருய்க் காணப்படினும், சதுரம் அழகியதே. வட்டமும் அழகியதே. இந்தியராகிய நமது உருவத்துக்கு, இவர்கள் உருவம் சிறிது வித்தியாசப் படினும், ஜப்பானியர் ஒருபோதும் குரூபிகளல்ல. ஜப்பானிய புருஷரும் சிறுவர்களும், தங்கள் தலைமயிரை ஐரோப்பியரைப் போலக் கத்திரிப்பித் துள்ளார். ஸ்திரீகளோ, எந்த நாட்டு ஸ்திரீகளையும் போல, தலை மயிர்மேல் மிகக் காதல் கொண்டு, சீவிப் பலவகை முடிப்பு முடித்து,





ஜப்பானிய பாடற் கணிகை

அதிற் பெருமை பாராட்டி வருகிருர்கள். ஜப்பானிய உடை வெகு விநோத மானது. தென்னிந்தியரைப் போலப் புருஷர் வேஷ்டியும், ஸ்திரீகள் சேலையும் உடுப்பதில்லை. வடக்கே யுள்ள முகம்மதியரைப் போல உடுப்பது மில்லை. பர்மியரைப் போல உடுப்பது மில்லை. ஐரோப்பிய

உடை தரித்த ஸ்திரி புருஷர்கள் வெகு, வெகு சிலரே.
புருஷர்கள், ஸ்திரீகள், பிள்ளைகள் எல்லாரும் சாதாரண
மாக உடுப்பது கிமோனோ என்னும் ஒருவகைத் தளர்ந்த,
தெறி (பொத்தான்) இல்லாத போர்வைச் சட்டை: இது,
குளிர் காலத்திலே யாயின், கம்பளிக் கிமோனோவும், குளி
ரில்லாத காலங்களிற் பருத்திக் கிமோனோவுமா யிருக்கும்.
அன்றியும் சீதோஷ்ணத்துக்குத் தக்கபடி, இரண்டு
மூன்று கிமோனோக்கள் ஒன்றின்மே லொன்றாகப் போட்
டுக் கொள்வார்கள். ஸ்திரீகள் இவைகளுக்கு மேலே
இடையைச் சுற்றி ஒரு கச்சு அணிவார்கள். காலுக்குத்தும்



ஜப்பானியர் சாப்பிடுதல்

வழக்கம் ஜப்பானியருக்குத் தெரியாது. ஜப்பானியர் வீடு
சாதாரணமாய் நமது நாட்டு வீடுகளைப் போலச் சிறியவை
கள். இரண்டு மூன் றடுக்குள்ள வீடுகள் பார்ப்பது மிக
அருமை. வீட்டைச் சுற்றியுள்ள சுவர் செங்கற் சுவரே.



ஆயினும் ஓரறையை இன்னொ ரறையி னின்று தடுப்பது
மூங்கிற் சட்டங்க ளுள்ள காகிதத் தடுக்குகளே. வீடுகள்
மிகச் சுத்தமாயும், அலங்கரிக்கப் பட்டும் இருக்கும்.
ஆயினும் பல தட்டு முட்டுக்கள் கிடையா. தரையிலே
மெல்லிய தூய வெள்ளைப் பாய்கள் விரித்திருக்கும். பாத
ரக்ஷைகளைத் தரித்துக் கொண்டு வீட்டிற்குள்ளே போக
லாகாது. சில வேளைகளில், வீட்டுக்குள்ளே போட வேறு
பாதரக்ஷைகளும் உண்டு. ஜப்பானியருக்குச் சாதாரண
மாக உணவு நெல்லரிசிச் சோறே. சில மரக் கறிகளும்
மீனும் சாதத்தோடு சாப்பிடுவார்கள். வாற்கோதுமை,
கோதுமை என்பனவும் சமைத்துச் சாப்பிடுவார்கள்.
இறைச்சி சாப்பிடுவார் சிலரே.



ஜப்பானியர் தூங்கும் விதம்

ஜப்பானியர் சாதாரணமாக உட்கார்ந் திருப்பதும்,
சாப்பிடுவதும் ; படுத் துறங்குவதும் தரையிலே தான்.
நமது நாட்டிலே மலையாளத்தார் முட்டி போட்டுக்
கொண்டு உட்காருவது போலவே ஜப்பானியர் உட்கார்ந்
திருப்பர். ஜப்பானியர் யாவரும் தேநீர் குடிப்பார்கள்.
ஆயினும் பாலாவது சருக்கரையாவது சேர்ப்பது அரிது.
ஜப்பானியரிற் பலர் இப்போது பால் சாப்பிடுகிறார்க ளாயி

னும், மாட்டுப் பாலை மனிதர் சாப்பிடலாம் என்பதை அவர்கள் கற்றுக் கொண்டது, கடந்த ஐம்பது வருஷத்துக் குள்ளே தான். பசுப் பாலைப் பிள்ளைகள் குடித்தால், அவர் களுக்கும் மாட்டைப்போலக் கொம்பு முளைக்கும் என்று ஜப்பானியரில் பலர் நினைத்த நாள் வெகு காலத்துக்கு முன்னல்ல. தற்காலத்திலே வெகு நாகரீகம் பெற்ற ஜனங் களுக்குள்ளே ஜப்பானியரும் வைத்து எண்ணப்படுவார்க ளாயினும், அறுபது எழுபது வருஷங்களுக்கு முன் ஜப்பா னியர் நாகரீகத்தில் மிகக் குறைந்தவர்களே.

(இன்னும் வரும்)



ஜப்பானியர் குஸ்தி

குறிப்பு :—ஜப்பானையும் ஜப்பானியரையும் பற்றிய படங்களின் அச்சுக்களை எனக்கு உதவியதற்காக, கிறிஸ் தவ இலக்கிய சங்கத்துக் காரியதரிசியான Rev. ஜே. பாஸ்மோருக்கு என் வந்தனங்கள் உரியன—ப-ம் ப-ர்.






I பஞ்சாமிர்தம் சந்தாதாரர்க்கு மட்டும் சிறப்பான பரிசு:—

விஷயம் :—"தீண்டாமை என்னும் தீங்கு" என்பதைப் பற்றி எட்டுப் பக்கங்களுக்கு மேற்படாத தமிழ் வியாசம் 1924வரு ஜூன்மீ 15உக்குள் பத்திராதிபரைச் சேரவேண்டும். சிறந்த வியாசத்துக்கு ஐந்து ரூபாய் விலை மதிப்புள்ள புஸ்தகப் பரிசு அளிக்கப்படும்.

குறிப்பு :—வியாசத்தைப் பத்திரிகையில் வெளியிடும் உரிமை பத்திராதிபருக் குண்டு. வியாசத்தில் சாஸ்திரோக்தமான நியாயங் களை எடுத்துக் காட்டுதல் நலம். காகிதத்தின் ஒரு புறந்தான் எழுத வேண்டும்; அதிகம் சந்தி சேராமல் தெளிவாய் எழுதுக.

II எல்லார்க்கும் பொதுவான பரிசு:—

பின் வரும் 4 விடு கதைகளுக்கும் 1-6-1924-க்குள் சரியான அழிப்பான் விடைகளை முதலில் எழுதியனுப்பு வோருக்கு ஒரு ரூபா விலை மதிப்புள்ள புஸ்தகப் பரிசு கொடுக்கப்படும்.

(1) எழெழுத் தொருபே ரிரண்டதி லொற்று முதலது மதுரை [யில் வருஞ்சீ
காழியிலிரண்டைந்தறுமுகன்செந்திற்பதியினில்காணலாமாறே
ழேழை யிலாமாத் தூரினில் நான்கும் மூன்றுமவ் வாய்ப்பினிலி [ருக்கும்
தோழநீ யப்பேர் கூறிடிற் பலபேர் தொழுவரே துணைக்கர [மெடுத்தே.

(2) உடல் நீண்டதாகும் உறை படங்க ளுண்டு
தொடலுமே சீறித் தொனிக்கும்—விடவலார்
மந்திரத்திற் கட்டுண்ணும் பாம்பில்லை மற்றிந்த
விந்தையை நீ யெண்ணிடல் வீணே.

(3) ஏழெழுத் தொரு பொருள்.
கம்பர் தலையெடுக்கக் கடை முதலைந் தாகும்
நம்பன் அடியார் கண் மூன்று நான் கென்பர்
உம்பர் தொழு தஞ்சை முத லாறிரண்டா முண்ண
அம்புவியில் வாய் செவியா லார்தா னவாவாரே.

(4) காலையிலே நான்கு கடும் பகலில் ஓரிரண்டு
மாலையிலே மூன்று கால் வாய்த்திடுமே—ஞாலத்
ததன் மேலொன் றில்லை யதன் கீழு மில்லை
யெதுவதுவென் றெண்ணி யியம்பு.




Rev. H. A. பாப்புலி, B. A., சென்னை

குடியியல் என்றால் தேசநீதி என்றும், ஜன தர்மம் என்றும்
பொருள் கொள்ளும். முற்காலம் வித்தை ஞானங்களிலே ராஜ
தர்மம் என்ற சாஸ்திரம் அதி முக்கியமா யிருந்தது. அது போய்க்
குடியரசு பெருகின இக்காலத்தில், ஜன தர்மம் என்னும் வித்தை
மிகவும் சிரேஷ்டமா யிருக்கின்றது.

இத் தேசத்தின் இராஜ பரிபாலன சபைகளில் பிரதிநிதி
களைத் தெரிந்து கொள்ளும் சிலாக்கியம், ஐம்பது லட்சம் பெயர்க்
குண்டு என்றறிவோம். இந்த உரிமையைப் பெற்றவர்கள், ஜன
தர்மம் என்ற வித்தையில் தேர்ச்சி யடைந்தவர்களா யிருத்தல் நல
மெனினும், பெரும்பான்மையோர் வாசிக்கத் தெரியாமலும், ராஜ்ய
பரிபாலனத்தைக் குறித்துக் கொஞ்சமேனும் அறியாமலும், ஆடு
களைப் போலப் பிறரைப் பின் தொடர்ந்து போகின்றனர். அரசு
புரியும் சக்தி இன்னவர்களுடைய கையில், குரங்கின் கையில் பூ
மாலை அகப்பட்டது போல் ஆகாதபடி, குடிகளின் முன்னேற்றத்
திற்குப் பயன்படும் பொருட்டு, அவர்கள் தகுதியுள்ள பிரதிநிதி
களைத் தெரிந்து சட்ட சங்கத்திற்கு அனுப்பி, அவர்கள் செய்யும்
காரியங்களைப் பகுத் தறிந்து கொண்டு கவனிப்பது அவசியம்.

'பழையன கழிதலும் புதியன புகுதலும்' முன்னேற்றத்
திற்குக் குறிப்புக்கள் என்று அறிதலால், குடியரசு மேற்பட்ட
இப்புதிய காலத்தில், அதற் கேற்ற படி அனுசரித்து நடத்தல்
வேண்டும். குடிக ளெல்லாரும் அரசு புரியும் வழி வகைகளை
ஆராய்ந்து அறிதலும், ஜன சமூகத்தின் முன்னேற்றத்திற் குரிய
வைகள் இன்ன வென்று தேர்ந் தறிதலும் உசிதம்; இல்லாவிட்டால்
பிரதி நிதிகள், கழுதையை ஓட்டத் தெரியாத வண்ணானைப்
போலிருந்து, ஜன சங்கத்தைக் குலைத்துப் போடுவார்கள்.

பண்டை நாளில் இந்தியாவில் பெரும்பான்மையான அர
செல்லாம் ஓரா ளரசு என்றறிவோம்: லிச்சவி என்னும் ஜன
சமூகத்திலும், வேறு இரண்டு மூன்று ஜன சமூகங்களிலும் சான்
றோரரசு இருந்ததாகத் தெரிய வருகிறது. இது தவிர, மற்றெல்
லாம் ஏகாதிபத்திய மாதலால், அரசு நூற்க ளெல்லாம் முக்கிய
மாய் அரசனுக் குரிய நீதி நெறிகளை வெளிப் படுத்தின.



திருவள்ளுவ நாயனார் இயற்றிய திருக்குறளும், இவ்வாறாக அரச
னது தர்மத்தை முக்கியமாக விளக்கிக் காட்டினது; என்றாலும்,
அதிலே அநேக இடங்களில், குடிகளுக் கேற்ற தர்மத்தையும் நாம்
கண்டறியலாம்.

உயர் குலத்தைச் சேராதவரான இத் திருவள்ளுவநாயனார்,
பதினெட்டு நூற்றாண்டுகட்கு முன்னர், அரசியலைக் குறித்து விரி
வாய் இந் நூலை எழுதினது, மிகவும் வியக்கத் தக்கது. அவர்
அர்த்த சாஸ்திரம், நீதி சாரம் என்ற நூற்களில் ஒன்றை யாவது
அறிந்து, அரசியலை எழுதி யிருக்க வேண்டிய தென்று நாம் அனு
மானிக்கலாம். எப்படி யென்றால், சம்ஸ்கிருத நூற்களில் எழுதி
னது போல, அவர், அரசின் எழு பகுதிகளைப் பற்றி எழுதி யிருக்
கின்றார். அவை யாவெனின்—அரசு, அமைச்சு, நாடு, அரண்,
பொருள், படை நட்பு, என்பவைகள். இதே வரிசையிலே,
இரண்டு நூற்களிலும் வைக்கப் பட்டிருக்கின்றன. இத்துடன்
அந் நூற்களில் சொன்னது போல, அரசர் அமைச்சரைச் சோதிக்
கும் நாலு சோதனைகளை விளக்கிக் காட்டி யிருக்கிறார்.

சம்ஸ்கிருத நூற்களுக்கும் திருக்குறளுக்கு முள்ள இவ்
வொற்றுமையைக் குறித்து வடிவேலு செட்டியார் பதிப்பித்த
திருக்குறளில் தெளியக் காணலாம்.

இவ்வாறாக அரசியலைப் பற்றி அநேக விஷயங்களில் ஒற்றுமை
யிருந்தபோதிலும், சில முக்கியமான விஷயங்களில் வித்தியா
சங்களு முண்டு. அவைகளாவன:—

(i) அரசுக்கு நன்மை பயக்கத் தக்கதாகத் தீமை செய்யலாம்
என்ற போதனை. இப் போதனையானது எவ்விடத்திலும் திருக்
குறளில் காணப் படுகின்றதில்லை. அது மாத்திரமல்ல; 'அறன்
வலி யுறுத்தல்' என்ற அதிகாரத்திலே, எல்லாவற்றிலும் அறமே
சிறப்புள்ளது என்று வற்புறுத்திப் போதிக்கப் பட்டது.

'அறத்தினூஉங் காக்கமு மில்லை; அதனை
மறத்தலி னூங்கில்லை கேடு.'

என்பது எல்லாவற்றிலும் அறத்தின் சிறப்பைக் காண்பிக்
கிறது. ஸ்ரீ ராமபிரான் பாதனுடைய வேண்டு கோளைத் தள்ளி,
அறவழியில் நேர்மையாய் நடந்து வந்தது, இதற்கு நல்ல உதாரணம்.

(ii) அரசன் தெய்வத்தி னிடத்தில் பிறந்து, தெய்வத்திற்குப்
பதிலாக வல்லமை செலுத்தி வருகின்றவன் என்ற போதனை
திருக்குறளில் காணப்படுகிற தில்லை.

(iii) இல்லற வாழ்வு, ராஜ்ய பரிபாலன தர்மத்தில் ஒரு
முக்கியமான பகுதியென்று, திருக்குறளிலே சொல்லப்பட்டது.

குடியியலுக்கு நாலு ஆதாரங்கள் உண்டு. அவையா
வெனின்:—கடவுள் பக்தி, வான் சிறப்பு, நீத்தார் பெருமை, அறத்
தின் வலி என்பன. இவை நான்கும் முதல் நான்கு அதிகாரங்
களில் சொல்லப் பட்டன. இவைகள் நல்லரசின் மாட்சிமைக்கு

மூலாதாரங்க ளாதலின், இவற்றை முதன் முதலில் வைத்திருக்கின்றனர் வள்ளுவனார். முதலில் கடவுள் பக்தி இன்றி யமையாதது. கடவுள் பக்தி யின்றி அரசு நிலைபெறாமலும் சீரடையாமலும் இருக்கும்.

இரண்டாவது வானத்தின் சிறப்பைத் தேற்றப் படுத்தி வைத்தார். 'உலகமும் அதற்கு உறுதியைத் தருவதாகிய அறம் பொருள் இன்பங்களும் நடத்தற்குத் துணைக் காரணமாகிய மழையினது சிறப்பைச் சொல்லுதலாம்' என்று, உரையாசிரியர் எழுதியிருக்கின்றார். வள்ளுவனார் மனோ பாவனைக் கேற்ற காரியங்களை எழுதாமல், உலக நடை யறிந்து, அதற்கேற்ற படியே நன்னெறிக் கட்டளைகளைப் போதித்து வந்தனர் என்று, இதனாலே அறியலாம். இந்தியாவில் வாழ்வு முழுவதும் மழையின் சிறப்பைச் சார்ந்து கொண்டே அமைந்தது என்று நாம் அறிகிறோம். அதினாலே வான் சிறப்பு இரண்டாம் ஆதாரம் என்று சொல்லி யிருக்கிறார்.

மூன்றாவது நீத்தார் பெருமை; அதிக முக்கியமான கூறிப்பாம். தொண்டை நாள் முதல் இந்நாள் வரை, நீத்தார், அதாவது, துறவிகள், அதிக கௌரவ மடைந்து, ஜனங்களுக்குள் செல்வாக்குச் செலுத்தி வருகின்றார்கள். தென்னிந்தியாவில் திராவிட அரசர்களிலும் இதை நாம் புறநானூற்றின் கவிகளால் தெரிந்தறியலாம். வட இந்தியாவில், வசிஷ்டர், விசுவாமித்திரர், கலைக்கோட்டு முனிவர், முதலியோர், பேர் போன துறவிகள். இக்காலத்திலும் ஸ்ரீ அரபிந்து கோஸ், சுவாமி சிரத்தானந்தர், மகாத்மா காந்தி என்பவர்கள் இதற்கு வலிமையான அத்தாட்சிகள்.

நான்காவது அறத்தின் வலிமை, அதிகச் சிறப்புள்ள தென்று வெளிப் படுத்தினார். அர்த்த சாஸ்திரம் முதலிய ராஜ்ய பரிபாலன நூல்களில் போதிக்கப் பட்ட சமயத்திற் கேற்ற சன்மார்க்க போதனை, திருக்குறளில் காணப்படுகிற தில்லை. நன்மை பயக்குமெனினும் தீமை புரியலாகாது என்பது திருக்குறளின் போதனை. இவ்விஷயத்திலே வட சாஸ்திரம் எல்லாவற்றுக்கும் இத்திருநூல் உயர்ந்த சிறப்பைப் பெற்றது.

முன் சொல்லிய நான்கும் குடி யியலுக்கு மூல காரணங்கள் என்று காட்டி, இல்லற வாழ்வு குடி யியலுக்குத் துணைக் காரணமென்று வற்புறுத்தி யுரைத்தார் திருவள்ளுவர். ஐந்து அதிகாரங்களில் இச் சங்கதியை விரித்தெழுதி யிருக்கின்றனர்.

இல்லறத்திற்கு மேலான சிறப்புக் கிடையாது. துறவறத்தில் பெறத்தக்க நன்மைகள் யாவும் இல்லறத்தில் யாவரும் பெறலாம். அர்த்த சாஸ்திரம் என்ற நூலில் இல்லறத்தின் சிறப்பைப் பற்றி ஒன்றும் சொல்லப் படவில்லை. மாட்சியுற்ற இல்லறத்திற்கு நாலு முக்கியமான அங்கங்களுண்டு என்று காணலாம். அவை, மாண்புடைய வாழ்கைத் துணை, அறிவுற்ற மக்கள், அளவற்ற அன்பு, மகிழ்ந்து விருந்தோம்பல் என்பனவை. இவைகளில் அன்புடைமை முக்கியம்.



'அன்பின் வழிய துயிர் நிலை; அஃதிலார்க்(கு)
என்பு தோல் போர்த்த வுடம்பு'

என்று கூறி, அதன் சிறப்பை திருவள்ளுவநாயனார் வெளிப்படுத்தினார். கிறிஸ்து பெருமான் திருவாக்குத் தவிர, வேறெந்த நூலிலும் இத்தகைய தேற்றத்துடன் அன்பைக் குறித்து நீதி நூலாசிரியர் போதித்த தில்லை என்பது துணிபாம். அரசு முழுவதற்கும் அன்பே சிறந்த சாதனையாம் என்று இதினாலே அறியலாம்.

இத் தகைய அன்பானது இன் சொல்லும் முக மலர்ச்சியும் கொண்டு, வருவிருந்து ஓம்புதலால் வெளிப் படுகின்றது.

'யாவர்க்கு மாம் இறை யவற் கொரு பச்சிலை
யாவர்க்கு மாம் பசு விற் கொரு வா யுறை
யாவர்க்கு மாம் உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்கு மாம பிறர்க் கின்னுரை தானே'

என்று திருமூலர் உரைத்தது இதற் குதாரணம். குடிகளின் நடக்கையில் பிறர் சேவை சிறந்த பகுதியா யிருக்கின்றது.

**குடிகளின் கடமைகள்** :—இந்திய நீதி நூற்களில் கடமை என்ற எண்ணம் சிறப்புப் பெற்றது. உரிமையைப் பார்க்கிலும் கடமையே சிறப்புள்ளது. மேற்கத்திய தேசங்களிலே உரிமைகளைக் குறித்து வாதாடி நீதி நூற்களை எழுதியுள்ளார். இந்தியாவின் நீதி நூற்களிலோ, கடமைகளைப் பற்றி எழுதி, நீதியை விரித் துரைக்கிறார்கள். ஆகையால் நாம் முக்கியமாகக் குடிகளின் கடமைகளைக் குறித்துப் படிக்க வேண்டும். இது விஷயமாய் ஒரு காரியத்தைக் கவனிக்க வேண்டும். முற்காலத்தில் அரசனுக்குரிய கடமைகள் என்று உரைக்கப் பட்டவை அநேகம்; இக் காலத்தில் குடியரசு பெருகின தால், அவைகுடிகளின் கடமைகளாய்விட்டன.

முதலாவது, பொது ஜனங்களுக்குக் காணப் பட்ட கடமைகளாவன :—ஒழுக்க முடைமை, அதாவது தத் தமது ஜாதிக்கும் ஆசிரமத்திற்கும் சொல்லப்பட்ட ஆகாரத்தை யுடையராயிருத்தல்; ஒப்புர வறிதல், அதாவது, நன்கொடை; கல்வி கற்றல், என்பவை.

இவைகளுள், முன்னர் அரசருக்கேயுரிய கடமைகளாயிருந்து, இக்காலத்தில் குடிகளுக் குரியவைக ளாவன : தெரிந்து தெளிதல், அதாவது, பிறப்புக் குணம் அறி வென்பன வற்றையும் செயலையும் காட்சி கருத்து ஆகம மென்னும் அளவைகளால் ஆராய்ந்து தெளிதல்; நடுவு நிலைமை, அதாவது, சமன் செய்து சீர் தூக்குங் கோல் போல அமைந் தொருவாய் கோடாமை; கண்ணோட்டம், அதாவது, தன்னோடு பழகினவரைக் கண்டால், அவராலே சொல்ல ப்பட்ட மொழியை மறுக்க மாட்டாமை; பொறையுடைமை, அடக்க முடைமை, ஊக்க முடைமை, ஆள்வினையுடைமை என்பவைகள், இக்காலத்தில் மிகவும் விசேஷமாயிருக்கின்றன. 'உர மொருவற் குள்ள வெறுக்கை' என்றும்,

'ஊழையும் உட் பக்கங் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்' என்றும்,
'தெய்வத்தா னாகா தெனினும் முயற்சி தன்
மெய் வருத்தக் கூலி தரும்' என்றும்,

அவர் பாடி, இக் கருத்தை மிகவும் தெளிவாக வெளிப் படுத்தினார்.

இவ்வாறாகப் பதினெட்டு நூற்றாண்டுகட்கு முன்னரே, திருவள்ளுவ நாயனார் குடி யியலைப் பற்றிப் போதித்து, குடிகளின் தன்மை இன்னதென்று சிறந்த வகையால் விளக்கிக் காட்டினார். குடியரசு நிலைத்துப் பெருகும் இக் காலத்திலே, இப் புலவரின் நாட்டாராகிய நாம், மிகுந்த நயத்துடன் அவர் வாக்குக்களை ஆராய்ந்து, அவைகளின் கருத்தை உணர்ந்து, அவைகளுக்குத் தக்கபடி நடக்கக் கடமை பெற்றிருக்கிறோம்.

வேந்தர்க்குக் கூறிய இயல்பு இக்காலத்திலே குடிகளுக்கும் வேண்டும் என்றலால்,

'அஞ்சாமை யீகை யறி வூக்க மிந் நான்கும்
எஞ்சாமை வேந்தற் கியல்பு' என்று,

திருக்குறளிலே சொல்லிய படியே, குடிகளுக் கேற்ற இயல்பும் இத்தன்மைத் தாம் என்றறிக. நாம் நமது நாட்டின் மேன்மையை நாடுவோம் என்றால், இத்தகைய குடிகளே நமது நாட்டில் இருத்தல் வேண்டும்.




ஸ்ரீ. ரே. சௌதிரியின் வியாசச் சுருக்கம்

இந்தியாவிலே விவசாயந் தான் முக்கிய ஜீவனோபாயம். தேசத்தின் விஸ்தீரணத்துக்கும் ஜன சங்கைக்கும் ஏற்ற அளவு கைத் தொழில்கள் பெருகவில்லை. எனினும், இந்தியத் தொழி லாளர் தொகை கொஞ்சமன்று. ஏறத் தாழ மூன்று கோடி ஜனங் கள், சணல் பருத்தி நிலக்கரி தேயிலை காப்பி அவுரி, கப்பல் ரயில் கால்வாய் ரோடு, இவைகளைச் சார்ந்த கைத் தொழில்களால் பிழைக் கின்றனர். இவர்களால் செய்யப்பட்டு, ஆண்டு தோறும் ஏற்றுமதி யாகும் சரக்குக்களின் விலை மதிப்பும் 87 கோடி ரூபாய்க்கு மேலாகும். இவர்கள் வேலையின் பயனாக முதலாளிகள் அடையும் லாபமோ மிகப் பெரிதாம்:—உதாரணமாக, தேயிலைத் தோட்டங்



களிலும் நிலக்கரிச் சுரங்கங்களிலும், வயிற்றுக்குப் பற்றாத சொற் பக் கூலியை வேலைக் காரருக்குக் கொடுத்து விட்டு, முதலாளிகள் கனத்த லாபத்தைக் கொள்ளை யடிக்கின்றனர். நிலக்கரிக் கனிக ளில் வேலை செய்யும் ஓர் இந்தியத் தொழிலாளி, ஒரு வருஷத்தில் சராசரி 119 டன் கரியைப் பொருட் படுத்தி, டன்னுக்கு ஒரு ரூபா வீதமே கூலி பெறுகிறான். அதே வேலை செய்யும் ஒரு ஜப்பானி யத் தொழிலாளி, 96 டன்னே முதலாக்கி, டன்னுக்கு 5 ரூபாய் வீதமும்; பெல்ஜியன், 130 டன் முதலாக்கி, டன்னுக்கு 8 ரூபாய் வீதமும்; இங்கிலீஷ் தொழிலாளி 196 டன் முதலாக்கி, டன் னுக்கு 15 ரூபாய் வீதமும், கூலி பெறுகிறார்கள். வெள்ளைக் கார ருக்குச் சொந்தமான (ஸில்கத் ஜில்லாவிலுள்ள) தேயிலைத் தோட் டங்களிலே, மாதம் ஒன்றுக்கு ஆணுக்கு 6 ரூபாயும், பெண்ணுக்கு 5 ரூபாயும், சிறுவர்க்கு 3 ரூபாயுமே கொடு பட்ட கூலி வயிற்றுக் குப் போதாமல், 1921-ஆம் வருஷத்திலே; 9000 கூலி யாட்கள் வேலை நீங்கி வெளி யேறினதும்; பிறகு வழியிலே கண்ட காலரா நோயினாலும், பந்தோபஸ்துக்காக ஸர்க்கார் அனுப்பின குர்க்கச் சிப்பாயிகளின் கொடுமையாலும் அவர்கள் பட்ட நிஷ்டூரங்களும் கஷ்டங்களும் பலர்க்கு ஞாபக மிருக்கலாம். நிலக்கரி வெலை செய் வோர் தரை மட்டத்துக்கு நெடுங் கீழே, ஈரப் பாங்கான காற் றோட்டமில்லாத சுரங்கங்களிலே வேலை செய்து களைத்து, புத்தி மந்தித்து, வெளியேறிய வுடன், வீட்டு வசதி போசன வசதிகள் இல்லாமல், எய்ப்பைத் தீர்த்துக் கொள்ளும் பொருட்டுக் கள்ளுக் கடைகளை நோக்குகிறார்கள். இவ்வண்ணம் இருவகையிலும் கெட்டு, வலி குன்றி, வாரத்தில் இரண்டு மூன்று நாள்களே வேலை செய்கின்றனர். ஐரோப்பிய யுத்தத்தில், எதிரிகளின் கப்பல்களால் தாக்குண்ட அபாயமான தறுவாய்களிலுங் கூட மனோ தைரியத் தோடு நடந்தவர்களும், பல தீரச் செயல்களைச் செய்து பரிசுகள் பெற்றவர்களும், கப்பல் நாயகர் பலரால் வேலைக்குச் சிறந்தவ ரெனப் புகழப் பெற்றவர்களுமான இந்திய லஸ்கர்களையும் சிராங்கு களையும் கவனித்தால், (இவர்களின் தொகை ஒன்றரை லக்ஷ மாகும்) இவர்கள் வேலை பெறுவதற்கு அதிகம் லஞ்சம் கொடுக்க வேண்டியிருப்பதால் கஷ்டப் படுவது விளங்கும். 200 ரூபாய் வரை கைக் கூலி கொடுத்துச் சிராங்கு வேலையைப் பெற்றவன், தன் கீழுள்ள லஸ்கர்களிடமிருந்து ஒற்றைக் கிரட்டி வசூல் செய்து விடுகிறான். ஏழை லஸ்கர்கள் இப்படிக் கொடுப்பதும் தவிர, வேலை பெறுவதற்கே ஒரு மாதச் சம்பளம் வரை லஞ்சம் கொடுக்க வேண்டி யிருக்கிறது. மேலதிகாரிகள் இன்னும் இதை ஒழுங்கு படுத்தவில்லை.

கூலிவேலை யாள்களை விட்டு, கை கால்களோடு மூளையும் உழைக்கும் மேலான ரயில்வே வேலைக்காரரையும் உயர்தரத் தொழி லாளிகளையும் கவனித்தால், ரயில்வேக்களில், சட்டைக் காரரையும் இந்தியரையும் மேல் கீழாக வித்தியாசமாக நடத்தும் அநியாயத்தால் தொழிலாளிகள் கஷ்டப்படுவதும், வேலை நிறுத்தங்கள் உண்டா வதும், ரயில்வே நிற்பதினால் வேறு பல தொழில்களும் இடர்ப் படுவதும்; தெரியவரும். [தொழிலாளிகளை விட்டு, விவசாய

சீவனம் செய்யும் கிருஷிகர்கள் கதியோ; இன்னும் மோசமா யிருக்கிறது. நமது சென்னை ராஜதானியிலே, வேலைக்குத் தகுந்த படி வயிற்றுக்குப் போதுமான கூலி கொடாததால், ஆற்றொழுக் குப்போல இடைவிடாமல், ஏராளமான கூலி ஜனங்கள், மலேயா கொழும்பு, பர்மா முதலிய அயல் நாடுகளுக்கு வெளியேறிச் செல் கின்றனர். இது திருந்தாவிடின் சீக்கிரத்தில் பயிர்த் தொழி லுக்கே கேடு வந்து விடும்.]

இப்பொழுது இந்தியத் தொழிலாளிகளுக்குள் புதியதோர் கிளர்ச்சியும், தன் மரியாதையும், சுதந்தர ஞானமும் உதித்து, வளர்ந்தேறி வருகின்றது. தொழிலாளிகளுக்குப் போலி நண்பர்க ளான சில தந்திரிகள், இக்கிளர்ச்சி உணர்ச்சிகளைத் தமக்கு வேண்டிய படி கிளைவழிகளில் திருப்பி, பயனில்லாத வேலை நிறுத்தங்களை விளைவித்து, தமக்குப் பேரும் பெருமையும், தொழிலாளிகளுக்குப் பட்டினியும் பாதகங்களுமே உண்டாகும்படி அவர்களை ஆட்டிவைக்கின்றனர். தொழிலாளிகளுக் குள்ளும் தக்க படிப்பு ஏற்பட்டு, விவேகமும் சுவாதீன புத்தியும் முதிர்ந்து விட்டால், அவர்கள், தங்கள் விஷயங்களைத் தாங்களே நிர்வகித் துக் கொள்வார்கள். அதுவரையும், இந்தியத் தொழிலாளிகளுக்கு அத்தியாவசியமாய் வேண்டியவை என்னவெனில், தாமும் மனைவி மக்களும் வயிறார உண்டு சுகவாழ்வு வாழ்தற்குப் போதுமான வேலைக் கேற்ற கூலியும்; அவர்களின் மனத்தையும் புத்தியையும் மயக்கிக் கெடுக்கும் லாகிரிக் கடைகளை எடுத்துவிடுதலும்; குடி யிருக்க வசதியும்; ஒழிந்த நேரத்தை உல்லாசமாகப் போக்குதற் குரிய சுக சௌக்கியங்களும்; மரியாதையாகப் பக்ஷபாதமின்றி அவர்களை நடத்துதலும்; வைத்திய சௌகரியங்கள் முதலி யனவுமாம்.








யஜமான் :—(வீட்டு வேலைக்காரனைப்பார்த்து) நான் போய் வரும் வரை அம்மா உத்திரவுப்படி நட. தெரிந்ததா?

வேலைக்காரன்:—சரி; இது புதிதா? எப்பொழுதும் போல்தானே!

---

விருந்தாடி:—தாங்கள் நில்லுங்கள்; பிளாட்பாரத்துக்குள் வந்தால் இரண்டணா டிக்கட்டு வாங்கவேண்டும்.

வழியனுப்புமவர்:—தாங்கள் போகிறபோது, 2 அணாப் பெரிதா? ரயில் போன பின்பே வீடு திரும்புவேன்.

---

யஜமான்:—வாசலில் வந்திருப்பவர் யார்? பட்டிக்காட்டு ஆளா, அல்லது, கனவானா?

வேலைக்காரன்:—இல்லை; தங்களைப்போல் தான் இருக்கிறார்.

---

குழந்தை:—அப்பா, நீ செத்துப் போனையா?

தகப்பன்:—என் அடா, அப்படிக் கேட்கிறாய்?

குழந்தை:– அம்மாவை, 'அறுதலி முண்டை' என்று திட்டினையே.

---

வீட்டுயஜமானி: —பால் திக்காய் இல்லையே என்?

பால்காரன்:—அம்மா பார்க்கவில்லையா? இப்பொழுது தங்கள் எதிரில்தானே மாடு தண்ணீர் குடித்தது.

---

வக்கீல்:—உங்கள் தம்பி வாக்கு மூலத்தினால் தான் கேஸ் ஜயித்தது, இல்லாவிட்டால், கோவிந்தா தான்.

கட்சிக்காரன்:—ஐயா, நிஜத்தைச் சொன்னதற்கு வந்தனம். பீஸ் பணத்தை என் தம்பிக்குக் கொடுத்து விடுகிறேன்.

---

விருந்தாடி:—நாயைப் பார்த்தால் பயமா யிருக்கிறதே.

வீட்டுயஜமான்:—நல்ல ஜாதி; கோம்பை; எதையும் தின்னும்; சின்னக் குழந்தைகள் என்றால், அதிகம் பிரியம்.

---

குழந்தை:—நான் என்ன கிழமை, எப்பொழுது பிறந்தேன்?

தாய்: —தை வெள்ளிக் கிழமையிலே இராத்திரி 11 மணிக்கு.

குழந்தை:—அதெப்படி அம்மா? நான்தான் தினமும் 9 மணிக் குள் தூங்கி விடுகிறேனே.

# பத்திராதிபர் குறிப்புக்கள்

**வைக்கத்தில் ஸத்யாக்ரகம்:**—தென்னிந்திய உத்ஸவ
விருந்துகளிலே, வைக்கத் தஷ்டமி பேர் போனது ; மற்
றெந்த ஸ்தலத்திலும், சுவாமிக்கு " அப்பன் " என்ற
பெயர் வழங்குவ தில்லை. இப்பெயர்க்கொத்த அருமையான
வைக்கத் தப்பனே, சிலருக்கு மட்டும் அப்பனும் அம்மையு
மாகவும், வேறு சிலருக்கு மாற்றாந் தாயாகவும் செய்து
விடுவது நியாயமாகாது. 'எல்லாரும் கொடுத்த வரிப்
பணத்தைக் கொண்டு எல்லாருக்கும் பொதுவாகச் செய்த
பாதைகளின் வழியே, நாய் பன்றி கழுதைகள் நடக்கலாம்;
தீண்டாச் சாதியரா யிருந்து கிறிஸ்தவர் மகமதிய ராக
மாறினவர் நடக்கலாம்; ஹிந்து மதத்தைக் கைவிடாது
போற்றி, வைக்கத்தப்பனே வணங்கும் பஞ்சமர் மட்டும்
நடக்கக் கூடாது' என்னும் வாதம், எவ்வளவோர் அப
வாத மாகின்றது! உலக வாழ்க்கையிலே வலியார் மெலி
யாரை வாட்டுதலைக் கண்டு வயிறெரிந்து, ஓர் இங்கிலீஷ்
கவிஞர், "மண்ணில் மனிதர் மனிதரை வதைப்பதே
எண்ணில் பல்லாயிரர் துயர்க் கெல்லாம் ஏதுவாம்" என்று
பாடியிருப்பதை, இது நன்கு விளக்குகின்றது. 'தெய்வம்
மனுஷ ரூபாணும்' என்பது முதுமொழி. வைக்கத் தப்ப
னுக்கு வாயுமில்லை, கையுமில்லை. எக்காலத்திலும் எந்நாட்
டிலுமே, எவ்விதத் திருத்தத்தையும் தடுப்பவர் சிலர்
இருக்கவே செய்வர். இங்கிலாந்திலே, முதல் முதல்
குடையைப் பிடித்தவர் மீது, கண்டவர் கல்லெறிந்தனராம்.
ஆகவே, 'பஞ்சமருக்கு வழிவிடோம்' என்று சிலர் மறிப்
பது புதுமை யன்று. எது நாகரிகம், எது அத்யந்தம்
நன்மையை விளைப்பது, உண்மையில் நியாயமானது எது
என்பதை உற்றறிந்து, அதன்படி நீதி செலுத்துவது
தான், விவேகமுள்ள செங்கோல் அரசன் கடமையாகும்.
அந்தஸ்தையும் அதிகார தோரணையுமே பெரிது பாராட்
டும் அரசாங்கத்தார், ஒழுங்குமுறை அடக்குமுறைகளின்
மேல் பாரத்தைப் போட்டு விட்டு, பலவித அக்கிரமங்களைச்
செய்வது எல்லா நாடுகளிலு முண்டு. குடிகளின் பொரு
ட்டு அரசேயன்றி, அரசுக் காகக் குடியில்லை என்பதை
மறக்க லாகாது. குடிகளுக்கு நியாயமும் சுக வாழ்க்கை
யும் இல்லாவிடின் அரசு வீண் சுமையே. கோல் கோணும்
அரசனது நாட்டினும் கடும்புலி வாழும் காடே நன்றெ
ன்று, ஓர் அரச கவியே பறையறைந் திருக்கிறார். நாம்
வாழுவது 1924—ம் ஆண்டோ, அல்லது 1294—ம்
ஆண்டோ என்னும் சந்தேகம், மனத்தில் உண்டாகிறது.
ஆயின், இது தவறே; 1294—ம் ஆண்டில் வாழ்ந்த நம்
முன்னோரை வீணில் பழிப்ப தாகும்; அவர்கள் இப்படிச்
செய்ததாகத் தெரியவில்லை. இவற்றையெல்லாம் ஆலோ
சித்து, இந்த அநியாயத்தை நீக்குவது, தர்ம ராஜ்யத்
திலே தர்ம மூர்த்தியாய் விளங்கும் பத்மநாப தாஸரான
திருவாங்கூர் மகா ராஜாவின் முதல் கடமை யாகும்.
ஹிந்துமத போஷகரான அரச ரொருவர், தமது ஹிந்துக்
குடிகளுக்கு நீதி செலுத்துவதற் காக, கிறிஸ்தவராகிய
ஸ்ரீமான் ஜார்ஜ் ஜோஸெப் என்பவர் சிறைச்சாலை புகுவது
அழகாயில்லை. அன்றியும், இத் தீண்டாமை விஷயத்தை,
துரைத்தனம் மதம் காங்கிரஸ் பிரசாரம், இவற்றோடு
கலப்பது தவறு. இது மனிதனது பிறப் புரிமையையே
தாக்குவதால், மத பேதம் கட்சி பேத மின்றி, எல்லாரும்
இதைத் தொலைக்க முயல வேண்டும்.

**ஸங்யாஸி கிராமத்தில் தீண்டாமை:**—திருநெல்வேலிக்
கடுத்த இந்த ஊரிலே வாழ்ந்துவரும் பிராமணர்கள்,
தங்கள் தெருவைக் 'கீழ்சாதிக்' கூலிகள் செப்பனிடக்
கூடாதென்று தடுத்து விட்டார்க ளாம். நாற்பது ஆண்டு
களுக்கு முன், நான் சிறு பையனாக இருந்த பொழுது,
எங்கள் வீதியை ரோடாக்கும்படி ஸர்க்கார் மராமத்துக்
கார சரளைக் கொண்டு வந்து குவித்ததும், வீதியைச் சரல்
ரோடாக்கி விட்டால் எல்லாச் சாதியார் போக்கு வரவுக்
கும் பொதுவாகி விடுமென்று பயந்து, ஊருக்குப் பெரி
யோர்கள் ரூபாய் 700 வரை செலவு செய்து, சரளை எடுப்
பித்துத், தெருவை மீண்டும் பழைய புழுதி யாக்கிக்
கொண்டதும், ஞாபகத்துக்கு வருகிறது. 40 ஆண்டுகள்
சென்றும், திருநெல்வேலி ஜில்லா இன்னும் பழைய
படியே இருப்பது ஆச்சரியமே. இவ்வூரில் தான், அம்
பட்டர் பிணங்களைச் சுட மாட்டோ மென்று சில நாள்
களுக்கு முன் மறுத்த பொழுது, பெருங் குழப்பம்
நிகழ்ந்தது. பிராமணரும், மற்ற 'மேல்' சாதியாரும்,
ரோடு மராமத்து, பிணஞ்சுடுதல், தோட்டிவேலை, உழவு,
மரமேறுதல் முதலிய, கௌரவக் குறைவாக மதிக்கப்படும்

வேலைகளைத் தம்க்குத் தாமே செய்து கொள்ளப் பழகி, அப்படியே செய்வார்களாயின், நமது தேசம் அதிசீக்கிரத்தில் மேன்மை யடைந்து, சுயராஜ்பமும் கையகப்பட்டு விடும் என்பதில் சந்தேக மில்லை.

அந்நிய நாடுகளில் இந்தியர்:—தமது மேல் தோல் வெள்ளையாய் இல்லாமையே காரணமாக, நமது சகோதரர் பல்லாயிரர் பிற நாடுகளில் படும் கஷ்டங்களைப் பற்றி விரிவாயெழுத எண்ணியிருந்தேன். வைக்கத்திலும் ஸங்யாஸி கிராமத்திலும் மற்றிடங்களிலும், நம்மூரில் நாம், நமது சகோதரரை நடத்தும் நியாயத்தைக் கண்டபின், பேனு ஓடவில்லை. ஓர் அநியாயம் மற்றோர் அநியாயத்தை நியாய மாக்கி விடாது என்பது உண்மையே. ஆனால், கண்ணாடி வீட்டில் குடியிருப்பவன் அடுத்த வீட்டின் மேல் கல்லெறிதல் தகுமோ? மாமி யுடைத்தால் மண்கலமும் மருகி யுடைத்தால் வெண்கலமும் ஆகுமோ? தன் சோற்றி லுள்ள கல்லைப் பொறுக்க மாட்டாதவன் சொக்கனூர் கோயில் மதிற்கல்லைப் பிடுங்க முயலுவது பொருந்துமோ? நாம் நமது ஹிந்து சகோதரரை இப்படி நடத்திக் கொண்டு, சாதி மத வர்ணங்களில் முற்றிலும் நமக்கு அந்நியரான பிற நாட்டார் நம்மவரை ஒதுக்கி விலக்குகிறார்களென்று, அவரைப் பழிக்க நமக்கு நாவேது? இத்தீங்கு, மக்களின் பிறப் புரிமையையே தாக்குவ தாகும். மகாத்மா காந்தியைக் குலதெய்வமாகப் பாவித்துக் கொண்டாடும் பலர், இத் தீண்டாமை விஷயத்தில் மட்டும் அவருக்கு நேர் விரோத மாக நடப்பது ஆச்சரியமே.

மலேயாவிலே, ஒரு வெள்ளை ஸ்திரீ, தன் வீட்டு வேலைக்காரனை, செத்தானென்று கண்டார் அஞ்சும்படி நையப்புடைத்த குற்றத்துக்காக, 200 டாலர் பணம் நஷ்டி மட்டும் கொடுக்க நேர்ந்ததாம்; அதே ஊரில், சில (கறுப்பு) இந்திய வேலைக்காரர், தமது வெள்ளைக் கண்காணியை அடித்ததாகக் குற்றம் சாட்டப்பட்டு, நபருக்கு ஐந்து வருஷம் கடுஞ்சிறைத் தண்டனை அடைந்தனராம்!

நிலவரி :—சென்னைச் சட்ட சபையில் கொண்டு வரப்பட்டுத் தோற்றுப் போன நிலவரிமசோதாவைப் பற்றி ஹிந்து பத்திரிகைக்கு எழுதுவதில், ஸ்ரீ T. V. சேஷகிரி ஐயர், நிலவரி மற்ற இடங்களில் ஏக்கர் ஒன்றுக்கு எவ்வளவா யிருக்கிற தெனபதைப் பின் வருமாறு குறித் திருக்கிறார் :—



| இடம் | ஒருபோக நிலம் | இருபோக நிலம் |
|---|---|---|
| மைசூர் | ரூ 7–0–0 | 10–0–0 |
| புதுக்கோட்டை | 7–8–0 | உயர்ந்தவரி |
| கொச்சி ராஜ்யம் | 7–8–0 | 9–6–0 |
| காஷ்மீரம் | 1–12–0 | உயர்ந்தவரி |
| சென்னை ராஜதானி | 14–0–0 | 20–0–0 |

சென்னை ராஜதானி பிரிட்டிஷ் ஜில்லாக்களில் நிலவரி இவ்வளவு உயர்வாயும், பயிரிடும் குடிகள் மிக்க ஏழைகளாயு மிருந்தும், இன்னும் வரியை உயர்த்த வழி தேடுவது, பசுவின் மடுவறுத்துப் பால் கொள்ள முயல்வதாகும். மைசூர் இராச்சியத்தில் வாங்கும் நிலவரி, சென்னையில் பாதியே யாயினும், அதுவுமே அதிகம் என்று குடிகள் முறையிட்டதனால், ஏக்கருக்கு ஒரு ரூபாய் குறைத்து விட்டார்களாம்.

மது விலக்கு:—சேலம் ஜில்லா ராசிபுரம் தாலுகா அக்கரைப் பட்டி 1 நெ. கள்ளுக் கடையை ஏலத்தில் எடுத்த செல்லையா கவுண்டர் என்பவர், மதுவிலக்குப் பிரசாரத்தின் பலனாகத் தம் கடைக்கு ஜனங்கள் குடிக்க வரவில்லை யென்றும்; அப்படி அவர்கள் குடியை விட்டு விடுவது, தேசத்துக்குப் பெரு நன்மை யென்று தமக்கும் தோன்றி யிருப்பதால், தாம் கள் கடையை மூடி விட்டதாயும்; தம்மைக் கிஸ்து செலுத்தும்படி ஸர்க்கார் நிர்ப்பந்திக்கக் கூடாதென்றும் மனுச் செய்திருக்கிறார். 'ஓரூரார் ஒருமித்து லாகிரிக் கடை வேண்டா மென்றால், கடையை எடுத்துவிடுவது' என்னும் கொள்கையை (local option) நன்கு மதிக்கும் அரசாங்கத்தார், அவருடைய வேண்டுகோளுக் கிணங்குவதுதான் நியாய மாகும். மற்ற ஊர்களிலும் இவ்வாறு குடி நின்று விட்டால், நாடு எவ்வளவோ செழித்தோங்கும்.

புதிய கவர்னர் தம்பதிகள்:—அந்நியர் ஆட்சியிலுமே, இராம னாண்டா லென்ன இராவண னாண்டா லென்ன என்றிருப்பது கூடவில்லை. நாடு தலைகீழாகப் புரண்டு, பல விதங்களில் கெட்டுச் சீரழிந்து கிடக்கின்றது. இதைச் சீர்ப்படுத்திப், பொது ஜனங்களின் மனத்தில் நம்பிக்கையையும் அமைதியையும் உண்டாக்கி, அவர்களின் நன் மதிப்பைப் பெற முயலுவது, புதிய கவர்னர் தம்பதிகளின் முதல் வேலையாகும். இதற்கு ஏற்ற வழி யாதெனில், மிகப் பல விஷயங்களில், இதுவரை நடந்தது போலன்றி,

யுக்தி புத்தி நியாயத்துக் கேற்ற புது முறைகளை
அநுஷ்டிப்பதாம்.

அகாலியர் ஜதா:—இன்னும் நடக்கிறது. அரசாங்
கத்தார் விட்டுக் கொடுக்கவுமில்லை; அகாலியர் தமது சாத்
விகப் போரை நிறுத்தவு மில்லை. உடல் வலிமைக்கும்
வீரத்துக்கும் போர்த் திறமைக்கும் மற்றெல்லா இந்திய
ரையும் விடப் பேர் போனவரும், வேறெந்த நாட்டாருக்
குமே பின் வாங்காதவரு மான அகாலியர், எல்லா வித
அவமானங்களையும் கஷ்டங்களையும் சகித்துக் கொண்டு,
இவ்வளவு தாழ்மையுடன் மன்ருடி நிற்பது, ஆச்சரியமான
காட்சியே. 'பொறுத்தார் பூமியாள்வார்' என்னும்
கருத்தையே "The meek shall inherit the earth"
என்று கிறிஸ்து கூறி யிருக்கிருர். தர்மமே முடிவில் ஜய
முறும் என்பது பெரியோரின் முழு நம்பிக்கை.

வியாபார சுதந்தரம்:—பண்டத்தில் பழுதில்லாவிடில்
விலை குறைந்த கடையில் கொள்வது தான் நன் மதியாகும்.
ரயில்வே தண்டவாளங்கள், அச்சுக்கள், உருளைகள்,
வண்டிகள் முதலியனவும், மராமத்து லாகா வேலைக்கு

---

அ. மாதவையர், பி. ஏ.,

இயற்றிய தமிழ்ப் புஸ்தகங்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | பதிமாவதி சரித்திரம் … … … | 2 | 0 | 0 |
| 2. | விஜய மார்த்தாண்டம் … … | 1 | 4 | 0 |
| 3. | உதயலன் … … … … | 0 | 12 | 0 |
| 4. | சித்தார்த்தன் … … … … | 0 | 12 | 0 |
| 5. | பால ராமாயணம் … … … | 0 | 12 | 0 |
| 6. | பால விநோதக் கதைகள் … … | 0 | 4 | 0 |
| 7. | போது தர்ம சத்கீத மஞ்சரி … … | 0 | 4 | 0 |
| 8. | ௸ ௸ கில்டு … … | 0 | 12 | 0 |
| 9. | இந்தியக் கும்மி … … … | 0 | 0 | 6 |
| 10. | புது மாதிரிக் கல்யாணப் பாட்டு… … | 0 | 2 | 0 |
| 11. | ஆசாரச் சீர் திருத்தம் … … … | 0 | 2 | 0 |
| 12. | பாரிஸ்டர் பஞ்சாநதம் … … … | 0 | 6 | 0 |

குறிப்பு :—இவை தவிர வேறு புஸ்தகங்கள் பலவும்
நம்மால் விற்கப்படும்.

**முத்து மீனாக்ஷி**—திருமலை சேதுபதி இவ்விரண்டு புஸ்தகங்
களும் முதற் பதிப்புச் செலவாய் விட்டன. இரண்டாம் பதிப்
புத் தயாராகிறது.



வேண்டிய கருவி சாமான்களும், இங்கிலாந்தில் விட,
ஜர்மனி, பெல்ஜியம், பிரான்ஸ் தேசங்களில், நூற்றுக்கு
முப்பது ரூபா குறைந்த விலைக்குக் கிடைக்கின்றன. இத
ணல், இங்கிலாந்தைத் தமது தாய் நாடாக மதிக்கும் தென்
ஆப்பிரிக்கா ஐக்கிய துரைத்தனத்தாருங் கூட, மேல்கூறிய
சாமான்களை இங்கிலாந்தில் வாங்காமல், தமக்கு வேண்டிய
22 லக்ஷ ரூபா விலையுள்ள தண்டவாளங்களை, ஜர்மனி
பெல்ஜியம் முதலிய தேசங்களில் வாங்குகின்றனர்.
பிரிட்டிஷ் சக்கராதிபத்யத்துக் குட்பட்டு ஒரே குடும்பத்
தினர் போல் ஒத்து வாழ்ந்து வருகிறவருங் கூட, தம்
லாபத்தையே கருதி இவ்வண்ணம் நடக்கும் பொழுது,
அக் குடும்பத்தில் தாப்புக்காரி ஸ்தானத்திலே இருந்து
வரும் இந்தியாவோ, இந்தச் சுதந்தரம் கூடவில்லாமல்,
இங்கிலீஷ் வியாபாரிகள் என்ன விலை சொன்னாலும்
தனக்கு வேண்டிய பண்டங்களை அநேகமாய் அவர்க
ளிடத்திலேயே வாங்கும்படி யிருக்கிறது. இங்கிலாந்தில்
சைநியங்களுக்கு வேண்டிய பண்டங்களைக் குத்தகையாய்
வாங்குவதில், கானடா, தென் ஆப்பிரிக்கா, ஆஸ்ட்ரேலியா
முதலிய கிளை நாட்டு வியாபாரிக ளிடம் தான் வாங்குவ

---

## குசிகர் குட்டிக் கதைகள்

அ. மாதவையர் இயற்றின இக் கதைகள் ஆதியில் ஹிந்து
பத்திரிகையில் இங்கிலீஷில் வெளிவந்த பொழுது, பல்லாயிரம்
பேர்கள் வாசித்து அநுபவித்தார்கள். எழுதியவர் 'குசிகர்' என்று
மட்டும் கண்டு, நிஜமான பெயர் வெளிவராமையால், கதைகளைப்
படித்தவரில் பலர்—ஸர் P. S. சிவஸ்வாமி ஐயர், திவான் பகதூர்
V. நாகமையர் முதலியோர்—தமது ஸந்தோஷத்தையும் வியப்
பையும், தமது மனவி மக்களுக்குக் கதைகளை மொழிபெயர்த்துக்
காட்டித் தாமும் அவர்களுடன் ஆனந்தித்ததையும், ஹிந்து பத்தி
ராதிபருக்குத் தெரிவித்தனர். பிறகு, ஹிந்து பத்திராதிபரே தமது
முகவுரையுடன் இக் கதைகளை இங்கிலீஷ் புஸ்தகங்களாக வெளி
யிட்டனர். பிறகு **சுதேசமித்திரனில்** சில கதைகள் மொழி
பெயர்த்து வெளிவந்தன எனினும், இது வரையும் தமிழில் இக்
கதைகள் புஸ்தக ரூபமாக, ஆக்கி யோர் மேற் பார்வையில், வெளி
வந்த தில்லை. இங்கிலீஷ் படித்துத் தேறிய புருஷரிலும், ஸ்திரீ
களே இக் கதைகளைப் படித்துணர வேண்டுவது அத்தியாவசிய
மாதலால், இக் கதைகளை இப்பொழுது சிறு புஸ்தகங்களாக
(இரண்டு கதை சேர்ந்தது ஒரு புஸ்தகம்) வெளியிட உத்தேசம்.
எல்லாரும் வாங்கும்படி ஒவ்வொரு புஸ்தகமும் 2 அல்லது 3 அணா
வுக்கு மேல் விலையிராது. வேண்டுவோர் பெயரை எழுதிப் பதிவு
செய்து கொண்டால், புஸ்தகங்கள் ஒழுங்காய் V. P. போஸ்டில்
அனுப்பப்படும்.

தென் றில்லாமல், எந்த நாட்டில் இலாப விலைக்குக் கிடைக்குமோ அங்கே தான் வாங்கப் போகிறார்களாம். எல்லா விதத்திலும் நியாயமான இந்த வியாபார சுதந்தரம், இந்தியாவுக்கு மட்டும் இல்லாமை, மிக்க பொருள் நஷ்டத்துக்கிடமாகி, தன் மரியாதையையும் குலைக்கின்றது.

"பஞ்சாமிர்தம்" பத்திரிகையைப் பற்றிய அறிக்கை. என் வேண்டுகோளுக்கு இணங்கி மன முவந்து விஷய தானம் செய்த நண்பர் தமிழபிமானிகளுக்கு என் மனமார்ந்த வந்தனங்கள் உரியன. வரிகளில் ஊடிடமின்றி நெருக்கியும், சில வற்றைச் சிறிய (ஸ்மால் பைகா) எழுத்தில் அச்சிட்டும் கூட, அச்சேறிய வியாசங்கள் சிலவும், ஏறுதன சிலவும், இம்மாதம் இடமின்றி மிகுந்து நின்று போயின. அவற்றை அடுத்த மாதம் வெளியிடுவேன். தாமதத்தை நண்பர் பொறுத்தருள்க. அடுத்த மாத முதல், வரிபிளந்து அழகாய் அச்சிட உத்தேசம். அடுத்த மாதத்துக் குரிய கட்டுரை, வியா சங்களைத் தயை செய்து உடனே எழுதி யனுப்ப வேண்டுகிறேன். அ. மாதவையர்

---

